Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 329

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தார்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975ஞு நவம்பர், கார்த்திகைமீ

# ஐப்பசித் திருமூல மஹோத்ஸவம்

செந்தமிழ்வேதியர் சிந்தைதெளிந்து சிறந்துமகிழ்ந்திடுநாள்
சீருலகாரியர் செய்தருள்நற்கலை தேசுபொலிந்திடுநாள்
மந்தமதிப்புவி மானிடர்தங்களை வானிலுயர்த்திடுநாள்
மாசறுஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வுமுளைத்திடுநாள்
கந்தமலர்ப்பொழில் சூழ்குருகாதிபர் கலைகள்விளங்கிடுநாள்
காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள்களித்திடுநாள்
அந்தமில்சீர் மணவாளமுனிப்பரனவதாரஞ்செயுநாள்
அழகுதிகழ்ந்திடு மைப்பசியில் திருமூலமதெனுநாளே.

மணவாளமாமுனிகளின் ஐப்பசித்திருமூல மஹோத்ஸவம் திவ்ய தேசங்கள்தோறும் நடைபெற்றாலும், கச்சித் தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடைபெறும் வைபவம் வேறு எந்த திவ்ய தேசத்திலும் நடைபெறுவதன்று என்பதை அநுபவரஸிகர்களே அறிவர். 29—10—75 புதன்கிழமை தொடங்கி இந்த மஹோத்ஸவம் தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடைபெற்றவாறு சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகிறது. தினந்தோறும் பகல் 11 மணிக்கு அலங்காரத் திருமஞ்சனம், உடனே திவ்யப்ரபந்த ஸேவை ஆரம்பமாகி மாலை 4 மணிக்கு கோஷ்டி முடிவு பெறுவது. இரவு 7 மணிக்கு ஸன்னிதிவாசலில் கொட்டகைப் பந்தலில் பத்தியுலாத்தல் ஊஞ்சல் நடைபெற்று உள்ளேயெழுந்தருளி 8 மணி முதல் 10 மணிவரை திருவாய்மொழி ஸேவை சாத்துமுறை நடைபெறுவது 7—11—75 திருமூல நன்னாளில் நித்யக்ரமங்கள் தவிர, தேவப்பெருமாள் திருமலையில் நின்றும் காலையில் கீழிறங்கி இரவு 8 மணிக்குத் திருவீதிப்புறப்பாடு கண்டருளி, [இன்று வெள்ளிக்கிழமை யாதலால்] பெருந்தேவித்தாயாருடனும் 11 மணியளவில் மாமுனிகள்ஸன்னிதிக்கெழுந்தருளி ஸேவை சாத்துமுறையாகி மறுநாள்காலை மாமுனிகளோடுங்கூட கண்ணாடியறைக்கு எழுந்தருளி மாமுனிகளுக்கு மரியாதை ஸாதித்து விடைதந்தருள, பெரியதிருவோலக்கத்துடனே ஸன்னிதிக்கு எழுந்தருளி கந்தப்பொடி வஸந்தோத்ஸவமாகி உத்ஸவஸமாப்தியாயிற்று.

---

# திருச்சேறையில் சிறப்பு அர்ச்சனை

சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றான திருச்சேறையென்பது ஸாரமயமாக விளங்கும் சிறந்ததொரு திவ்யதேசமாகும். அதாவது இந்த க்ஷேத்ரத்திற்கு ஸாரக்ஷேத்ரமென்று திருநாமம்; இதில் ஸாரபுஷ்கரணிக்கரையில் விளங்கும் ஸார விமானத்தில் ஸ்ரீ ஸாரநாயகியுடன் ஸ்ரீ ஸாரநாதப் பெருமாள் பஞ்சலக்ஷ்மீ ஸமேதராய் காவேரிக்குக் காட்சி தந்துகொண்டு எழுந்தருளி பக்தவர்க்கத்திற்கு ஸேவை தந்தருளுமழகு ஸாரமாகச் சொல்லில் வாசாமகோசரமென்னத்தகும். இச்சமயத்தில் லோககல்யாணத்தை யுத்தேசித்து கால் கோடி அர்ச்சனை செய்விக்கவேணுமென்று ஸங்கல்பித்து பல பெரியார்கள் 9—10—1975 யன்று தொடங்கி நடத்தி வருகிறார்கள். பக்திச்ரத்தைகளுடன் கூடி பக்தர்கள் செய்யும் வழிபாடுகள் ஒருகாலும் வீண்போகாவென்பது சாஸ்த்ரத்திலும் அநுபவத்திலும் கண்ட விஷயமாதலால் ஆஸ்திக மஹாஜனங்கள் உத்ஸாஹத்துடன் இதில் கலந்துகொண்டு எம்பெருமான் திருவருளுக்கு இலக்காக வேணுமென்று ஷை அர்ச்சனை குழுவினர் அனைவரையும் வேண்டிக்கொள்கிறார். அர்ச்சனை சீட்டு 1-க்கு கட்டணம் ரூ. 12/- பக்தர்கள்—செயலாளர், கால்கோடி அர்ச்சனைக்குழு, ஸ்ரீஸாரநாதப்பெருமாள் திருக்கோயில், P. O. திருச்சேறை, கும்பகோணம் வட்டம்—என்கிற விலாசத்திற்கு எழுதுக. ...

ஸ்ரீ ராமாநுஜன்—329



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸ ஸ்ரீ கார்த்திகைமீ 10—11—75 | ஸஞ்சிகை 5

# கார்த்திகைத்திங்களும் கலிகன்றிகளிருவரும்

(இருவரில் முதல் கலிகன்றியாவார் "மஞ்சுலாஞ்சோலை வண்டறைமாநீர் மங்கையார் வாட்கலிகன்றி" என்ற திருமங்கையாழ்வாராவர். இரண்டாம் கலிகன்றியாவார் திருக்கலிகன்றிதாஸரென்று நஞ்சீயரால் திருநாமஞ் சாத்தப்பெற்ற நம்பிள்ளையாவர்) **திருமங்கையாழ்வார் வைபவச்சுருக்கம் வருமாறு;**

கலியன், கலிகன்றி, குறையல்பிரான், வாள்வீசும்பரகாலன், ஆடல் மாவலவன், ஆலிநாடன், மங்கைவேந்தன், மங்கையர்கோன், திருமங்கையாழ்வார் என்றிவை முதலான பல திருநாமங்கள் இவர்க்குள்ளன. திருவாலி திருநகரியைச் சார்ந்த திருக்குறையலூரில் கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நன்னாளில் இவரது திருவவதாரம் *மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற அவதரித்த* என்ற உபதேசரத்தினமாலையின் படியும், 'வேத சதுஷ்டய அங்கோபாங்கங்கள் பதினலும்போலே இந்நாலுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவலாறும் மற்றை யெண்மர் நன்மாலைகளும்". என்ற ஆசார்யஹ்ருதய(43)சூர்ணையின்படியும் அறியவேண்டியவிசேஷமொன்றுண்டு.

வடமொழி வேதத்திற்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பதுபோல தமிழ் வேதத்திற்கும் அவையுள்ளன; ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்கிற நான்கு வேதங்களுக்கும் சிக்ஷா வ்யாகரணம் ச்சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்கிற ஆறு அங்கங்களும் மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்த்ரங்கள் முதலிய உபாங்கங்கள் எட்டும் ஆகப் பதினன்கு உறுப்புக்கள் அமைந்திருப்பதுபோலவே, நம்மாழ்வாரருளிச் செய்த திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி ஆகிய தமிழ்மறை நான்கிற்கும் இத் திருமங்கையாழ்வா

ருடைய திவ்வியப் பிரபந்தங்களாறும் மற்றையாழ்வார்கள் எண்மருடைய திவ்வியப் பிரபந்தங்களும் அங்கோபாங்கங்களாமென்று ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான பூருவாசாரியர்கள் அறுதியிட்டனர். இவ்வாழ்வாருடைய பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் ஆகிய ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கமாகக் கொள்ளப் பட்டன. வடமொழி வேதங்களுக்கு சீக்ஷா வ்யாகரணம் நிருக்தம் முதலியவை அங்கமாகுந் தன்மையை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "சீக்ஷாயாம் வர்ணசிக்ஷா பதஸமதிகமோ வ்யாக்ரியா நிர்வசோப்யாம்" இத்யாதி ச்லோகத்தினால் நிருபித்துக் காட்டியிருப்பது போல நம்மாழ்வாருடைய ஆறு பிரபந்தங்களும் தமிழ்மறைக்கு அங்கமாகுந் தன்மையை நிருபித்துக் காட்டவேண்டாவோ வென்னில்; கேண்மின்;

அங்காங்கிபாவஸமந்வயம் பலபடிகளால் பொருந்தும். வடமொழி வேதங்களுக்கும் சீக்ஷாதிகளுக்கும் அங்காங்கிபாவம் எவ்விதமாகப் பொருந்தியிருக்கின்றதோ அவ்விதமாகவே இங்கும் பொருந்தவேணு மென்கிற நிர்பந்தமில்லை நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தைப் பெரும்பாலும் பின்பற்றியே இவ்வாழ்வார் அருளிச்செய்துள்ளார் என்பதுவே இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது; இதையிட்டே 'மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற" என்றது. அதனை ஸ்ரீ ராமாநுஜனிலேயே முன்பு வெளிவந்திருக்கிற "அபூர்வார்த்த ரத்னநிதி"யில் மகர வரிசையில் "மாறன் பணித்த" என்ற மகுடத்தின் கீழ்க் கண்டுகளிப்பது ... ... ... ... *

# நம்பிள்ளை வைபவச் சுருக்கம்

நஞ்சீயருடைய திருவடிகளிலே ஆச்ரயித்தவர்களில் தலைவர் நம்பிள்ளை. இவர்க்கு இயற்கையான திருநாமம் 'நம்பூர் வரதராஜாசார்யர்' என்பது. ஸ்வாசார்யரான நஞ்சீயர் உகந்து சாத்தின திருநாமம் நம்பிள்ளை யென்பது. அந்தத்திருநாமம் சாத்துகைக்கு அடியென் னென்னில்; நஞ்சீயர் பட்டருடைய நியமனப்படி திருவாய்மொழியின் திவ்யார்த்தங்களை ப்ரவசனஞ் செய்வதையே போதுபோக்காகக் கொண்டு வாழ்ந்து வந்தார் திருவரங்கம் பெரிய கோயிலில். அவருடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்தவர்களில் நம்பூர் வரதராஜாசார்யரும் ஒருவராயிருந்துவந்தார். இவர் நீறுபூத்த நெருப்புப்போல இருந்து வந்தபடியாலே இவருடைய ஞானவைபவம் முதலிய பெருமைகளை விசேஷித்து யாருமறியாதிருந்தனர்.

இப்படியிருக்கையில், நஞ்சீயர் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய ஆறுயிரப்படியிற்காட்டிலும் சிறிது விரிவாகவொரு வ்யாக்யானமிடும்படி பட்டருடைய நியமனம் பெற்றிருந்ததனால் ஒன்பதினாயிரப்படி என்றொரு வியாக்கியானம் இட்டருளியிருந்தார் அதைச் செவ்வையாகப் பட்டோலை கொள்ள வல்லாரிடம் கொடுத்து எழுதுவிக்கவேணு மென்று கருதி இதற்குத் தகுந்தவர்கள் யாரேனுமுளரோ வென்று அந்தரங்கர்களை விசாரிக்கையில் 'நம்பூர் வரதராஜர்யரென்றொருவர் ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டிக்குத் தவறாது வருகின்றாரே; அவர் நல்ல விரகர்; எழுத்திலும் வல்லவர். அவரைக்கொண்டு இப்பணியை நிறைவேற்றிக் கொள்ளலாமே' என்று கூறினார்கள். பிறகு அவரை அருகே வர

வழைத்து ஆராய்ந்து பார்க்கையில் அவருடைய பாண்டித்யம் ஒப்புயர்வற்றதென்று தெரிய வந்தது; அதனால் உள்ளம் பூரித்து அவர்பால் விசேஷ கடாக்ஷம் செய்தருளித் தம்முடைய ஒன்பதினாயிரப்படியை வரியடைவே அவர்க்கு ப்ரவசனமும் செய்து அதை யெழுதித் தரும்படி ஸ்ரீகோசத்தை அவரிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்டவவர் தம்மூருக்குச் சென்று எழுதிக் கொண்டு வருவதாகச் சொல்லிப்போகையில், திருக்காவேரியில் நீந்திச்செல்ல நேர்ந்தது; அப்போது திருமுடியில் கட்டிக்கொண்ட அந்த ஸ்ரீகோசம் நெகிழ்ந்து விழுந்து வெள்ளத்திற் போய்விடவே 'இப்படி அபசாரமாய்த் தலைக்கட்டிற்றே' யென்று வருந்த நேர்ந்தது. ஆனாலும் இவர் தாம் அந்த வ்யாக்யானத்தை ஸ்வாசார்யர் திருவடிகளிலே வரியடைவே கற்றிருந்தபடியாலும் அவருடைய கருணை கடாக்ஷத்தை விசேஷித்துப் பெற்றிருந்த படியாலும் அவருடைய திருவடிகளைச் சிந்தித்துக் கொண்டே பட்டோலை கொள்ளத் தொடங்கி விரைவில் எழுதிமுடித்து ஸ்ரீகோசத்தை நஞ்சீயர் திருவடிகளிலே கொண்டு வைத்தார். 'நாம் கொடுத்த ஏடு எங்கே?' என்று அவர் கேட்கையில், நடந்தது நடந்தபடியே விண்ணப்பஞ் செய்யவேண்டியதாயிற்று. பிறகு நஞ்சீயர் ஸ்ரீகோசத்தை அவிழ்த்துக் கடாக்ஷிக்கையில், தாமருளிச் செய்த ஸ்ரீஸூக்திகள் விடாமலும் தம்மிடம் அவர் கேட்டிருந்த சில அர்த்த விசேஷங்கள் பொருத்தமாக அமைந்தும் அதிகவிரிவில்லாமலும் இருந்த அழகுக்கு மிகவுகந்து 'வாரீர் நம்முடைய பிள்ளையே!' என்று எடுத்தணைத்துக் கொண்டார். அதுமுதலாக நம்பிள்ளை யென்றே இவர் வழங்கப்பெற்று வந்தார். திருக்கலிகன்றிதாஸர் என்பதும் இவர்க்கு நஞ்சீயர் சாத்தின திருநாமம்.

இவருடைய ஞான வைபவத்தைப்பற்றி நாம் விரிவாக எழுதவேண்டுமோ? பெரிய திருமொழி வ்யாக்யானத்தில் "ஓதுவாய்மையு முவனியப் பிறப்பு முனக்கு முன் தந்த அந்தணனொருவன்" என்ற விடத்து "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்துப் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளுமதிகரித்து, போதுபோக்கும் அருளிச் செயலிலேயாம் நம்பிள்ளையைப் போலே" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி யொன்றே இவருடைய ஞானப்பெருமையை விளக்கக்கூடியது. திவ்யப்ரபந்தங்களுக்கும் இதிஹாஸ புராணாதிகளுக்கும் இன்சுவையே வடிவெடுத்த அர்த்தங்களை யருளிச்செய்வதில் இவர்க்கு ஒத்தாரும் மிக்காருமில்லையென்று ப்ரஸித்தமாயிருந்தது.

லோகாசார்யரென்கிற திருநாமமும் இவர்க்கு உண்டு. அது பற்றிய வரலாறு கேண்மின்; இவர் கோயிலில் வாழ்ந்த காலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இவர் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸகலார்த்தங்களும் கேட்டு வந்தார்கள். 'நம்பெருமாள் கோஷ்டியோ நம்பிள்ளை கோஷ்டியோ' என்னும்படி மிகப்பெரிய சிஷ்ய கோஷ்டிஸம்பத்துடன் வாழ்ந்துவந்தார். அப்போது முதலியாண்டான் திருப்பேரனாரான கந்தாடை தோழப்பரும் அங்கு வாழ்ந்து வந்தார். அவரும் வித்வானாயிருக்கச் செய்தேயும் அவரிடத்தில் ஒருவரும் ஆச்ரயியாதிருக்கவே அவர்க்குப் பொறாமையுண்டாகி ஒருநாள் நம்பிள்ளையைப் பெருமாள் கோஷ்டியிலே திரஸ்காரமானவார்த்தைகளைச்சொல்லிப் பரிபவித்துவிட்டுத் திருமாளிகைக்கெழுந்தருளினர். அவருடைய தேவிகள் இந்த அஸஹ்யாபசாரத்தை யறிந்து கண்ணும் கண்ணீரு

மாகவந்து 'அந்தோ! இப்படியும் பரமாசார்யர் திருவடிகளிலே அபசாரப்படுவீரோ? உமக்கு உய்யும் விரகுண்டோ? என் செய்தீர்! என் செய்தீர்! ஐயோ!' என்று பலவுஞ் சொல்லி அநுதாபத்தை யுண்டாக்க, தோழப்பரும் அநுதபித்து நம்பிள்ளை திருவடிகளில் க்ஷமைவேண்ட வேணுமென்று பாரித்திருக்க, அதற்குள்ளே நம்பிள்ளை தாமே தோழப்பருடைய திருமாளிகையேற வந்திருந்து வேரற்ற மரம்போலே விழுந்து தெண்டனிட்டு, தேவரீருடைய திருவுள்ளம் சன்றும்படி வர்த்தித்த அடியேனுக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லை யென்று பலவுமருளிச் செய்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டார். அப்போது தோழப்பர் அந்த மஹாகுணத்திற்கு வியந்து 'ஸ்வாமிந்! தேவரீரை இத்தனை நாளும் சிறிது பேர்களுக்கு ஆசார்யராக எண்ணியிருந்தேன்; இப்போது லோகத்துக்கெல்லாம் ஆசார்யர் தேவரீர் என்று திண்ணமாகக் கொண்டேன்'' என்றார். அதுமுதலாக நம்பிள்ளைக்கு லோகாசார்யரென்று திருநாமம் வழங்கிவந்தது; ''துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் தம் முகப்பால், என்னவுலகாரியனோ வென்றுரைக்க, பின்னை யுலகாரியனெனும் பேர் நம்பிள்ளைக்கோங்கி, விலகாமல் நின்றதென்றும் மேல்'' என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் இங்கே அநுஸந்திக்கத்தகும்

இப்பேராசிரியரின் திருவடிகளில் பணிந்து அல்லும் பகலும் ஸகலார்த்தங்களையுங்கேட்டுத் தரித்த வடங்குத் திருவீதிப்பிள்ளையும் பெரியவாச்சான்பிள்ளையும் உலதக்குச் செய்திருக்குமுபகாரம் கைம்மாறற்றது. ... ... *

## எச்சரிக்கை

ஐப்பசி மாதத்து ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் (பக்கம் 56ல்) ஸ்ரீமதுராந்தகம் வித்வானுடைய கைவல்ய விவேசனம் என்கிற சுவடிக்கும் நமது ஸ்ரீராமாநுஜன் பத்ரிகைக்கும் விமர்சனங்கள் கார்த்திகை மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளியிடப் போவதாகக் கண்டிருக்கிறது. மதுராந்தகம் ஸ்வாமி வெளியிட்ட விவேசனச் சுவடிக்கு அது வெளிவந்த அன்றே அடுத்த க்ஷணத்திலேயே அதற்கு நமது மறுப்பு ஸ்ரீகோஶம் ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்துள்ளதை உலகம் கண்டு களித்திருக்கின்றது. அதற்கும் விமர்சனம் அடுத்த இதழில் வெளிவரப்போவதாக ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா தெரிவித்துள்ளது. அந்த விமர்ஶனத்தோடு கூடவே, இந்த ஸ்ரீராமாநுஜனில் வெளிவருகின்ற **ந்ருஸிம்ஹப்ரியாஸமீக்ஷா** என்கிற ஸ்ரீகோஶத்திற்குப் விமர்ஶனம் ஆவசியம் வெளிவரவேணும். ''இற்பிறப்பறியீர் இவரவரென்னீர் இன்னதோர் தன்மையென்றுணரீர், கற்பகம் புலவர் களைகணென்றுலகில் கண்டவா தொண்டரைப் பாடும்'' என்ற திருமங்கைமன்னன் பாசுரத்தை நினைவூட்டும் வார்த்தைகள் சிலவற்றை இங்கு ந்ருஸிம்ஹப்ரியா எழுதியுள்ளது. அவருடைய சுவடிகளுக்கு (ஒன்று விடாமல்) நாம் எழுதி வெளியிட்டுள்ள ஸ்ரீகோஶங்களினால் அவருடைய பாண்டித்யம் எத்தகைத்து? என்பதை உலகமறிந்திருக்கின்றது. போனது போகட்டும். இப்போது இதில் வெளிவருகின்ற ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா ஸ்ரீகோஶத்திற்கு கோபதாபங்களின்றியும் உபாலம்பலவலேஶமின்றியும் அந்த ஸ்வாமி ''ஸமீக்ஷா பர்யவேக்ஷணம்'' வெளியிட்டருள்வரேல், அவரை நாம் சதுஶ்ஶாஸ்த்ரபண்டிதராகப் போற்றி *மாகந்தநீர்கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழுதுய்வோமென்பது திண்ணம். அஸ்தாநே அகாண்டே அவரைத் தூக்கிவைப்பதனாலேயே அவருடைய சுவடிக்கு வெற்றியை ஸம்பாதித்துக் கொடுக்க நினைக்கிறதந்தோ ந்ருஸிம்ஹப்ரியா. ''உந்நதம் பதமவாப்ய யோ லகுர் ஹேலயைவ ஸ பதேத்'' என்ற (குவலயாநந்தோபாத்த) ஶிகாலயத ச்லோகத்தையே வித்வான்கள் ஸ்மரிப்பார்கள். ... *

# வேத ஸ்வரவிசாரப் பகுதி

தைத்திரீயஸம்ஹிதையில் லக்ஷக்கணக்காக ஓதப்பட்டுவரும் பதங்களில் பல பதங்களின் ஸ்வரம் ஓரிடத்திலும் மாறுபடாமல் எங்கும் ஒரேவிதமாக ஓதப்பட்டு வருவதையும், பல பதங்கள் ஷூஷெஷெ ந ஷூஸெெஷ மடைந்துவருவதையும், அப்படி பேதமடைந்து வருவது காரண விஶேஷத்தோடு கூடியதே யொழிய நிஷ்காரணமன்று என்பதையும் நிருபித்து வருவது அடியேனொருவனே செய்துவரும் காரிய மென்பதை வைதிகவுலகம் அறிந்தேயுள்ளது. இதைப்பற்றி ஒவ்வொரு மாதத்திலும் ஸ்ரீராமாநுஜன் வெளிவந்தவுடனே பல வைதிகர்கள் தங்கள் தங்கள் ஸந்தோஷத்தை மறைத்து வைத்துக்கொள்ளாமல் — மனச்சாட்சியை வஞ்சிக்காமல் தெரிவித்து வருகிறார்கள். அநேக பிருதாவளீபூஷிதராய் உபந்யாஸ ப்ரவீணராய் ஸலக்ஷணகனபாடி யென்று புகழ்பெற்றவராய், விசேஷித்து என்னிடத்திலும் என்னுடைய வியாஸங்களிடத்திலும் ஹ்ருதயஸாக்ஷிகஸௌஹார்தராய் விளங்கும் கமலாபுரம். உ. வே. K. V. ஸந்தானகோபாலாசாரியர் 20—10—75ல் ஹைதராபாத் நகரத்திலிருந்து (இது பற்றி) மிக விரிவாக எழுதியுள்ள ஸந்தோஷாதிஶய பரீவாஹ பத்ரிகை அவசியம் வெளியிடத்தகுந்ததாயினும் அவகாஶமின்மையால் வெளியிடப்படவில்லை. அடியேனுடைய வேதப்பகுதி வியாஸங்கள் அபூர்வமானவை யென்பதையும் மிக மிக ஆவஶ்யகங்களானவை யென்பதையும் மாத்ஸர்ய மற்றவர்கள் மதித்துள்ளார்களென்று மகிழ்கிறோம்.

இப்போது, தெவ:, தெவ, தெவா: என்கிற மூன்று பதங்களின் ஸ்வரவிஶேஷத்தைப்பற்றின விமர்ஶத்தை வெளியிடுகிறேன். (தெவ:) என்பது ஸவிஸர்கமான பதம். ப்ரதமைகவசநாந்த பதம். (தெவ) என்கிற விஸர்கரஹிதமான பதம் ஸம்புத்தி. (தெவா:) என்கிற பதம் ப்ரதமாவிபக்தியிலும் ஸம்புத்தியிலும் பஹுவசநாந்தமாக வருவது. இவற்றுள் (தெவ:) என்கிற பதம் எங்கும் ஒரே ஸ்வரமாகத்தான் வரும். ஓரிடத்திலும் ஸ்வரபேதம் கிடையாது. *தெவொவஸவிதா* ஐ.தராதி வாக்ய ஸமூஹங்கள் காணலாம். எங்கும் ஆத்யுதாத்தமும் அந்தோதாத்தமுமேயிது. (தெவ) என்கிற விஸர்கரஹிதமான பதம் இருவகையான ஸ்வரத்தோடு ஓதப்பட்டு வருகின்றது. ஆத்யுதாத்தமும் அநுதாத்தமுமாகப் பலவிடங்களில். ஸர்வாநுதாத்தமாக [நிஹதமாக]ப் பலவிடங்களில். இது ஸம்புத்தியாகையாலே நிஹதமாக [ஸர்வாநுதாத்தமாக] வருவது இயற்கை. ஆமந்த்ரித மென்றபடி. *அக்னெதெவ பணிவிதீபரா: * ப்ருதெவஸுவர்ணவ்ருதழ * இத்யாதியாகப் பல விடங்கள் காணலாம். இந்த பதம் வாக்யாதியிலோ பாதாதியிலோ வந்தால் அவசியம் ஸ்வரம் மாறிவிடும். நிஹதமாயிருக்குமிருப்பைவிட்டு ஆத்யுதாத்தமும் அநுதாத்தமுமாக ஓதப்படும். * தெவஸவிதரெதத்தெப்ராஹ * தெவத்வஷ்டர்ஶரி * இத்யாதி காண்க. இனி (தெவா:) என்கிற பதத்தையெடுத்துக் கொள்வோம். இப்பதம் மூன்று வகையான ஸ்வரங்கள் பெற்றுவரும். ப்ரதமாபஹுவசநாந்தமாகில், (தெவ:) என்கிற ஏக வசநபதம் போலவே நியமேந ஆத்யுதாத்தமும் அந்தோதாத்தமுமாகவே

வரும். *விஶ்வேதேவாஸ்தாவர்ய: *த்ராந்து தேவா ஸபா³ந்தவ: * தம் தேவா ஸதுநாயத * *தேவா வை நர்ஷி:* இத்யாதி பரஶ்ஶதஸ்தலங்கள் காண்க. இப்பதமே வாக்யாதியிலோ வாக்யாந்தியிலோ ஸம்புத்தியாக வந்தால் ஸ்வரம் மாறிவிடும். *தேவாவஸோவஸ்யா தேவா ஸுக்ருதா தேவா ஸ்வாவீதய:* இத்யாதிகள் காண்க. இங்கு ஷட்த்ருஷ்டாக்ஷமும் ஸங்க்ஷிப்தமுமாகவுள்ளது. இதே பதம் [ஸம்புத்தியென்கிற ரூகாரம் மாருமல்] வாக்யமத்யேவருமாகில் நியமேந நிஹதமாகும். *இதம் தேவாஶ்ஶ்ருணுதேதி * யேதேவாஸோ திவ்யேகாதஶஸ்த * இத்யாதி ஸ்தலங்கள் காண்க. ஆக, (தேவ:) என்பதற்கு ஒரே ஸ்வரம் நியதம் தேவ! என்பதற்கு இரண்டு ஸ்வரங்கள். (தேவா:) என்பதற்கு மூன்று ஸ்வரங்கள்—என்று நிரூபித்தாயிற்று. தேவீ, தேவௌ என்கிற பதங்களைப்பற்றி அடுத்த இதழில் நிரூபிக்கக் காணலாம். .... .... .... ... *

---

## பூர்வாசார்ய திவ்யஸூக்திப் பகுதி

— தத்வ முக்தாகலாப மங்கள ச்லோகம் —

லக்ஷ்மீநேத்ரோத்பலஶ்ரீஸததபரிசயாதேஷ ஸம்வர்த்தமாந:
நாபீநாளீகரிங்கந்மதுகரபடலீதத்தஹஸ்தாவலம்ப: ।
அஸ்மாகம் ஸம்பதோகாநவிரதவிததேர்நாபிஸஞ்ஜாதஹேதோ:
காளிந்தீகாந்திஹாரீ கலயது வபுஷ: காளிமா கைடபாரே: ॥

[நேற்று ஆவணிமாதத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி அஹோபில மடாதிபதி ஸ்ரீ அழகியசிங்கர்க்கு ஸ்ரீ காஞ்சியில் நடந்த ஶதாபிஷேகமஹோத்ஸவத்தின் சார்பாக நடைபெற்ற மாலோல வித்வத் ஸதஸ்ஸில் அடியேன் ஸ்ரீ ஸ்வாமி நியமனங்கொண்டு ஒன்பதாவது நாள் பிற்பகலில் இரண்டு மணிகாலம் உபந்யஸித்த இந்த ஶ்லோகத்தின் பொருளை இங்கு மிகமிகச் சுருக்கி யெழுதுகின்றேன்.]

— முந்துற முன்னம் இந்த சுலோகத்தைத் தமிழ்ச் செய்யுளாக மொழிபெயர்த்து விஜ்ஞாபித்தேன் ; அச்செய்யுள் வருமாறு ;-

கமலமாமாதின் குவளையொண்மலரேய் கண்களிற் காட்சியாற் கிளர்ந்து
கமலமாங்கொப்பூழ்மிசைமிளிர் களிவண்டொளிகள்தாங் கைகொடுத்துதவக்
கமழுநற்றுளபமாலேயின் சவியின் கனத்தினுல் கனத்ததாய் விளங்கும்
கமலேநாதன்றன் யமுனையிெனளிகொள் கருமைநம் வறுமையைக் களைக.

(இனி விவரணம்.) சுலோகத்தின் பொருளை விவரித்தால் செய்யுளின் பொருளும் தன்னடையே விவரித்ததாகு மாதலால் சுலோகத்தின் விவரணம் மட்டும் ஈண்டெழுதப்படுகின்றது. [கைடபாரே: வபுஷ: காலிமா அஸ்மாகம் ஸம்பதோகாந் கலயது.] எம்பெருமானுடைய திருமேனியின் கறுப்பு நிறமானது தமக்குச் செல்வங்களை யளித்திடவேணுமென்கிறது. *கண்ணனென்னுங்கருந்தெய்வம் நமக்குச் செல்வமளித்திடுக. என்றே, அவனுடைய கரிய திருமேனி நமக்குச் செல்வங்

களை அளித்திடுக என்றே ஸாதிக்கலாமாயிருக்க அப்புடைகளில் பணிக்காமல் அப்பெருமானது திருமேனியின் கறுப்பு நிறம் நமக்குச் செல்வமளிக்கவேணு மென்றது கவிகளின் சமத்காரரீதியிற் சேர்ந்தது என்றுமட்டுங் கொள்ளலாகாது, காலிமா என்னும் சொல்லின் பொருளான கறுப்பு நிறம் நிரூடலக்ஷணையினுல் எம் பெருமானுடைய பரத்துவத்தைச் சொல்லி நிற்கும். ஆழ்வார்களும் ஆசாரியர் களும் திருமேனி நிறங்கொண்டே பரமனுடைய பரத்வத்தை ஸாதிக்கக் காண்கி ரோம். ஆழ்வார்களுள் முதல்வரான பொய்கையாழ்வார் தமது திருவந்தாதியில் (5) * அரன் நாரணன் நாமம் ஆன் விடை புள்ளூர்தி, உரை நூல் மறை, உறை யுங்கோயில்—வரை நீர், கருமமழிப்பளிப்பு கையது வேல் நேமி, உருவமெரி கார் மேனி யொன்று * என்றும், கடைக்குட்டியான திருமங்கையாழ்வார் திருநெடுந் தாண்டகத்தில் (2.) *ஒருருவம் பொன்னுருவமொன்று செந்தீ ஒன்றுமா கடலுருவ மொத்து நின்ற, மூவுருவுங்கண்டபோது ஒன்று ஆஞ்சோதி முகிலுருவமெம்மடி களுருவந்தானே* என்று மருளிச் செய்தனர். திருப்பாணாழ்வார் * ஒரெழில் நீல மேனியையோ! நிறை கொண்டதென்னெஞ்சினையே * என்கிறார். இங்ஙனே ஒவ் வோராழ்வாருடையவும் பாசுரங்களைப் பன்னியுரைக்குங்காற் பாரதமாம். ஆசாரி யர்களில் ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நத்தில் * [Grantha text] .... * என்று நிறத்தையும் பரத்வலக்ஷணங்களில் ஒன்றாகக் காட்டி யுள்ளார். கூரத்தாழ்வானும் ஸ்ரீ வைகுண்டஸ்தவத்தில் * [Grantha text] ... [Grantha text]* என்றருளிச் செய்தனர். ஆகவே ஒக்ருதச்லோகத்தில் (காலிமா) என்றதற்குப் பரத்வமென்றே பொருள் கொள்ளத் தட்டில்லை. கறுப்பு என்பதற்குப் பரத்வம் பொருளென்று எந்த நிகண்டில் கூறியுள்ளதென்று க்ஷேபிக்க வருவார்க்கு நாம் கூறுவதொன்றுமில்லை. ஸ்வாமி தாமே தயாசதகத்தில் தயாளுவான பரம புருஷனுக்குச் சொல்லவேண்டு வதையெல்லாம் தயா குணத்தினிடத்திலேயே ஏறிட்டுச் சொல்லுவதை இங்கு ஒருவாறு நினைப்பது. இனி இந்த கறுப்பு நிறத்திற்கு இடப்படுகிற நான்கு விசேஷணங்களும் எம்பெருமானுடைய பரத்துவத்தையே மூதலிப்பனவாகும்.

[லக்ஷ்மீநேத்ரோத்பல ஸ்ரீ ஸததபரிசயாத் ஏஷ ஸம்வர்த்தமாந:] எம்பெருமான் ஸ்ரீய:பதியாகையாலே பராத்பரன்—என்பது இந்த விசேஷணத்தின் பரமதாத் பர்யம். * மையார் கருங்கண்ணி கமல மலர்மேல் செய்யாள், திருமார்பினில் சேர் திருமாலே! * என்ற திருவாய்மொழிப் பாசுரத்தையும், * வண்டார் பூமாமலர் மங்கை மணநோக்கமுண்டானே! * என்கிற பெரியதிருமொழிப் பாசுரத்தையும், * [Grantha text] * [Grantha text] * என்கிற ஸட்டர் ஸ்ரீ ஸூக்திகளையும் இங்குப் பரக்க உபந்யஸித்தேன். [நாபீ நாலீகரிங்கந் மதுகர படலீதத்தஹஸ்தாவலம்ப] * நாட்டைப் படையென்றயன் முதலாத் தந்த நளிர்மாமலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலனே பராத்பரன் என்பது இந்த விசேஷணத்தின் பரம தாத்பர்யம். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் "எம்பெருமானுடைய திரு நாபிக்கமலமே அவனுடைய பரத்துவத்தை ஸ்தாபிக்கின்றது" என்று ஒரு பாசுர மருளிச் செய்கிறார்— * முதலாந்திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும்

மூன்றுக்குமென்பர்–முதல்வா!, நிகரிலகுகாருருவா! நின்னகத்த தன்றே. புகரிலகு தாமரையின் பூ * என்பது; அப்பாசுரத்தை பட்டர் ஸம்ஸ்க்ருத மொழி பெயர்த்து ஸ்ரீரங்கநாதனுடைய திருநாபிக் கமலத்தை வருணிக்கிறார்—* [illegible] * என்பது அந்த ச்லோக ரத்நம். பரமனுடைய பாரம்யத்தை ஸித்தாந்தம் செய்வதற்கு அவனுடைய திருநாபிக் கமலமொன்றே போதுமென்பது நம் ஆழ்வாராசாரியர்களின் திருவுள்ளம். நம்மாழ்வார் திருவாய்மொழியைத் தலைக்கட்டும்போது * மேவித் தொழும் பிரமன் சிவனிந்திரனாதிக்கெல்லாம், நாபிக்கமல முதற்கிழங்கே * என்றருளியது தலையான பிரமாணம். இதையெல்லாமுட்கொண்டே இங்கு * நாபீநாளீகரிங்கதித்யாதி விசேஷணமிட்டருளினபடி.

[அவிரலதுலஸீதாமஸஞ்ஜாதபூமா] எம்பெருமானுடைய பாரம்யஸ்தாபகங்களான லக்ஷணங்களில் திருத்துழாய் மாலையுடைமையும் ஒன்றாயிருக்குமாயிற்று. அருளிச் செயல்கள் பெரும்பாலும் திருத்துழாய் மயமாயிருக்கும். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * வக்ஷஸ்ஸ்தல்யாம் துலஸிகமலா கௌஸ்துபைர் வைஜயந்தீ ஸர்வேசத்வம் கதயதிதராம் * என்கிறார். திருமார்பில் திருத்துழாய், பிராட்டி, கௌஸ்துபம், வைஜயந்தி ஆகிய இந்நான்கும் எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வஸ்தாபகங்களென்கிறார். திருவாய்மொழியில் (8—9) * கருமாணிக்கமலைப் பதிகம் வெகு விலக்ஷணமாக அமைந்துள்ளது; ஆழ்வாராகிற கன்னிகைக்கு விவாஹப்ரயத்நம் நடக்கிறது; அப்போது தோழியானவள் இவளுக்கு ஏற்கெனவே விவாஹம் நடந்துவிட்டாப் போலிருக்கிறதே, நீங்கள் புதிதாக முயற்சி செய்வது தகுதியன்றே என்ன; எங்களுக்கொன்றும் தெரியாமல் விவாஹம் எப்படி ஆய்விடுமென்று அன்னைமார் கேட்க, அப்போது தோழியின் பேச்சு— * அன்றி மற்றோருபாயமென்? இவளந்தண்டுழாய் கமழ்தல்....குட்ட நாட்டுத் திருப்புலியூர் நின்ற மாயப்பிரான் திருவருளாமிவள் நேர்பட்டதே * என்று சொல்லித் தலைக்கட்டுகிறாள். திருத்துழாயின் நறுமணம் எம்பெருமானிடத்தில் மட்டுமன்று; எம்பெருமானோடு அணைந்தவர்களிடத்திலும் கமழும்; * வெறிகொள் துழாய்மலர் நாறும் வினையுடையாட்டியேன் பெற்ற * இத்யாதிகளுங்காண்க. * தாராயினுந்தழையாயினும் தண்கொம்பதாயினும் கீழ்வேராயினும் நின்ற மண்ணாயினுங்கொண்டு வீசுமினே * * தன் மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான் * இத்யாதிகள் பலபல காண்க. ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் (9-9) * கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில் கொன்றைகள்மேல் தூங்கு பொன்மாலைகளோடு உடனாய் நின்று தூங்குகின்றேன் * என்றருளிச் செய்துள்ள பாசுரத்தை ப்ராஸங்கிகமாக வெடுத்து விரித்துரைத்தேன் ஸ்டீஃஸிவில். இப்பாசுரத்தின் கருத்து மிக ஆழ்ந்தது; திருமாலிருஞ்சோலை மலையில் கொன்றைமரங்களின்மீது தொங்குகின்ற கொன்றைப் பூமாலைகளோடொப்ப நானும் தூங்குகின்றேனென்று கூறுகின்ற ஆண்டாளுடைய உட்கருத்தை யறிந்து அருளிச் செய்த ஆசாரியர்களின் மேதையே மேதை'. திருமாலிருஞ்சோலை மலை

யில் ஸாத்விக புருஷர்கள் ஏறிப் போவர்களே யன்றி ராஜஸரும் தாமஸருமான தேவதாந்தர பக்தர்கள் ஏறிப் போகார்கள். அத்திருமலையில் கொன்றைகள் மிக மிகப் பூத்துக்கிடக்கின்றன. அவை சிவனை வழிபடுமவர்களுக்கே பயன்படும்; திருமாலிருஞ்சோலையழகரோ திருத்துழாய் பரிமாறுந் தெய்வம்; கொன்றைப் பூ அவர்க்குப் பயன்படா; பயன்படுத்தக் கூடிய சைவர்களோ அங்கு வருவதில்லை; ஆதலால் அம்மலர்கள் அங்கே பூத்து அங்கே வீழ்ந்தொழிவதன்றி வேறென்றுக்கும் பயன்படாவே. அவற்றின் ஜன்மம் எப்படி வீணோ, அப்படியே என் பிறவியும் பழுதாயொழிந்ததே! என்று நிர்வேதம் காட்டினபடி. இப்பாசுரம் உள்ளுறை பொருள் வகையில் திருத்துழாயின் பெருமையைக் காட்டுதற்கே தோன்றின தென்னலாம்.

[காலிந்தீகாந்திஹாரீ] இது கடைசியான விசேஷணம். எம்பெருமானுடைய திருமேனியின் கருமை அநவரதம் யமுனையாற்றில் குடைந்தாடியதனாலும் மேன்மை பெற்றது—என்பது ஸாமாந்யமான பொருள். எம்பெருமானுடைய பரத்துவம் யமுனைக் கரையிலே மிகமிகப் பொலிந்தது என்பதே முக்கியமாக விவக்ஷிதம். விரஜையாற்றின் கரையிலே இனிது வாழ்ந்த பரம புருஷன் நித்ய விபூதிலிருந்து லீலாவிபூதிக்கு எழுந்தருள நினைத்தபோதே அந்த விரஜை இங்கே ஸரயுவாகவும் யமுனையாகவும் வடிவெடுத்தது. ராமாவதாரம் ஸரயூ நதிக்கரையிலேயானாலும் பெருமாள் ஸரயுவிலே திருவடியை வைத்து ஆசமனம் செய்ததாகக் கூடத் தெரியவில்லை. அவதார ஸமாப்தியில்தான் ஸரயுவில் (குப்த காட்டில்) இறங்கியதாகக் காண்கிறோம். யமுனையின் பாக்கியமோ நிகரற்றது. கண்ணபிரான் யமுனைத்துறைவனென்றே பேர்பெற்றான். * யமுநாஸாக்ஷிக யௌவநம் * *காளிந்தீரஸிகாய* இத்யாதிகள் தேசிகனுடைய திவ்யஸூக்திகள். * எமுனைக் கரைக்கென்னையுய்த்திடுமின் * என்றுளாண்டாள். "சரயுக் கரைக் கென்னையுய்த்திடுமின்" என்று சொன்னாருமில்லை. அது நிற்க கண்ணபிரான் யமுனைக் கரையில் பன்னிரண்டாண்டு வாழ்ந்திருந்து செய்த செய்கைகள் பெரும்பாலும் அவனுடைய பரத்துவத்தைக் காட்டுமவையேயாம் * மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக், கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவை கீறி நிச்சலுந்தீமைகள் செய்வாய் * என்றும், * எண்ணெய்க் குடத்தையுருட்டி இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக், கண்ணைப்புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும் பிரானே * என்றும் சொல்லும்படியாகச் செய்த சிறுச் சேவகங்களில் என்ன பரத்வம் பொலியும்? என்று கேட்டுவிடவேண்டா. கண்ணன் உரலினிடையாப்புண்டு அழுதேங்கியபோது பலபல முனிவர்கள் வந்து சூழ்ந்து படுகாடு கிடந்து * உபநிஷத்ஸஹஸ்ரைவமேகோ நிபத்த * என்று சொல்லி வணங்கினார்களாம்; அவர்களறிந்த பரத்துவத்தையறிய நாமார்! * ஸாஜாதவேவாஶ்யமம் அகூ்ரம் தாமோதரம் தவாத் கமாமவிதம். விஸோகயஸ்தா: மஞவிக்ரமிணஸ்தா விதேஸ்தாம்பதா நஸ்ஸேலி ஸஸ்: (யாஜ்ஞவல்க்யே) என்ற குறத்தியைக் கேட்டாவது உணர்க. கண்ணபிரான் முக்கியமாக யமுனையிலே காட்டின பரத்துவம் எதுவென்றால் * யமுநாமதிஜம் வீசரம் நாநாவதம் ஸுஷாகம்ஸுரம், வஸேஷெவோ வஷநு கூரஷ்ணம் ஜாநஸா தெரோதகொ

யபௌ * என்னும்படியானதேயாம். * [illegible] * என்ற யாதவாப்யுதய ஸ்ரீ ஸூக்தியுங் காண்க.

ஆக இத்தகைய பெருமை வாய்ந்த [கைடபாரே: காலிமா] எம்பெருமானது கருநிறமானது. [அஸ்மாகம் ஸம்பதோகாங் கலயது] நமக்கு ஸம்பத் ஸம்ருத்தியை யுண்டாக்குக. இதை மொழி பெயர்த்த அடியேனுடைய செய்யுளில் *கருமை நம் வறுமையைக்களைக * என்றுள்ளது. இவற்ருல் ஏராளமாகப் பணம் கிடைக்க வேணுமென்று பிரார்த்திக்கிறபடியன்று. ஈசாவாஸ்யோபநிஷத்தின் கடைசிருக்கான *अग्ने नय सुपथा राये अस्मान् * என்றதில் (ராயே) என்பதை விவரிக்குமிடத்து தேசிகன் * [illegible] * என்றெடுத்துக் காட்டியுள்ள சுலோகத்தை நினைப்பது. குறளாசிரியர் * நுண்ணுணர்வின்மை வறுமை. அஃதுடைமை பண்ணப்பணைத்த பெருஞ் செல்வம் * என்கிருர். அத்தகைய ஸம்பத்தையே ஸ்வாமி விரும்புகிருர்.

---

# ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா

(பத்ராதிபர் P. B. A.)

நிகழும் ராக்ஷஸஹூ ஐப்பசி மாதத்து ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ஸஞ்சிகையில் ஸஹ்ருதயஸஹ்ருந்மணியான ஸ்ரீமதுபயவே. திருக்கள்ளம்ஸ்வாமி "எம்பெருமானின் லீலாவிநோதம்" என்னும் மகுடம் புனைந்த ஒரு கட்டுரையை வெளியிட்டிருப்பது அனைவருமறிந்ததே. அதைப் பலரும் வாசித்திருப்பர்கள். அதில் முடிவிலுள்ள ஒருவாக்யத்தை முந்துற முன்னம் எடுத்துக் காட்டுகிறேன். (அதாவது)

> "விவாதத்தை வளரவொட்டாமல் தடுக்கவேண்டிய பொறுப்பு முழுக்க முழுக்க ஸ்ரீ ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமிக்கே உள்ளது என்பதை ஸவிநயம் தெரிவித்துக்கொள்கிருேம்" என்பதாம்.

இந்த முடிவுவாக்கியத்தை மட்டும் காட்டினுல் போதுமா? போதாது. இந்தக் கட்டுரை இரண்டே பக்கமுள்ளது; முதற் பக்கம் முழுவதையும் உதாஹரிக்கிறேன்.

"ஸ்ரீ ராமாநுஜ தர்சனத்தில் வடகலை தென்கலை என்ற இரண்டு பிரிவுகள் சில நூற்ருண்டுக் காலமாக இருந்து வருகின்றன. இந்த இரண்டு ஸம்பிரதாயங்களுக்குள் சுமார் பதினெட்டு விஷயங்களில் அபிப்பிராயபேதம் இருக்கிறது. தங்கள் கொள்கைதான் சரி என்று இரு தரப்பினரும் பல காலமாக வாதித்து வருகின்றனர். இதனுல் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. யாரும் தங்கள் கொள்கையை விட்டுக்கொடுக்கவும் ஸித்தமாக இல்லை. இவர்கள் சண்டையைக் கண்டு மதாந்தரஸ்தர்கள் பரிகசிப்பதுதான் கைகண்ட பலன். தங்கள் ஸம்பிரதாயத்தி

லும் ஸம்பிரதாயக் கொள்கைகளிலும் அசஞ்சலமான பற்று இருப்பது மிகவும், அவசியமே. தங்கள் ஸம்பிரதாயக் கொள்கைகளைப் பத்திரிகைகளின் மூலம் பரப்புவதும் அத்யாவச்யகமானதே. ஸ்ரீ வைஷ்ணவத்துக்குப் பலரால் பல பிரகாரமாகச் சோதனை ஏற்பட்டு வரும் இந்தச் சமயத்தில் ஸஹோதர ஸம்பிரதாயங்கள் ஒன்றை ஒன்று தாக்கிக்கொண்டு மேலும் அதைச் சோதனைக்கு இடமாக்குவது யுக்தமா? தேசிக ஸம்பிரதாய பத்திரிகைகள் தேசிகனுடைய ஸித்தாந்தங்களை விரிவாக எடுத்துரைக்கலாம். சரணாகதி செய்தால்தான் பகவான் மோக்ஷம் கொடுப்பான் என்பதை நன்ருக விவரிக்கலாம். ஆனல் பிள்ளைலோகாசார்யர் நிர்ஹேதுக கிருபையினலேயே பகவான் மோக்ஷம் அளிப்பதாகக் கூறுகிருர். அது தவறு என்று கண்டிக்கக்கூடாது. இதே மாதிரி தென்ஞசார்ய ஸம்பிரதாயத்தைச் சார்ந்த பத்திரிகைகள் கைவல்ய விஷயத்தில் தங்கள் ஆசார்யர்களின் தீர்மானத்தை நன்ருக விளக்கிக் கூறலாம். ஆனல், தேசிகன் ஸாதித்திருப்பது சரியன்று என்று கண்டிக்கக்கூடாது. விவாதக்ரஸ்தமான மற்ற விஷயங்களிலும் இதே நிலையைத் தான் கடைப்பிடிக்க வேண்டும். 'ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா' இதைத்தான் கடைப் பிடித்து வந்திருக்கிறது. ஆனல், தென்ஞசார்ய ஸம்பிரதாயப் பத்திரிகையான 'ஸ்ரீ வைஷ்ணவஸுதர்சனம்' கைவல்ய விஷயத்தில் ஸ்ரீ தேசிகனுடைய நிர்ணயம் சரியன்று என்று குறிப்பிட்டிருந்தது. இதைக்கண்ட ஒரு பெரியவர் நமது பத்திரிகைக்குக் கடிதம் எழுதியிருந்தார். அந்தக் கடிதமும், அதற்கான பதிலும் 'ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா' வில் பிரசுரமாகியுள்ளன. அடியேனுடைய பதிலில் 'மேலும் இம்மாதிரி விஷயங்கள் பிரசுரிக்கப்படுமானல் நமது பத்திரிகையும் தான் செய்யவேண்டியதைச் செய்யத் தயங்காது' என்றே குறிப்பிட்டிருக்கிறேன். நடந்த விஷயத்தில் சச்சரவுக்குக் கிளம்புவதாகக் கூறவில்லை."

இதற்குமேல் இரண்டாவது பக்கத்திலிருந்தும் சிலவரிகளை உதாஹரிக்கிறேன்.

"விவாதக்ரஸ்த விஷயங்களில் ஸ்ரீ தேசிகனுடைய நிர்ணயமே சரியானது என்பதை நமது பத்திரிகை நிலைநாட்டும். பாதுகை, ஸேவா, புனர்வஸு முதலிய தேசிக ஸம்பிரதாயப் பத்திரிகைகளும் தங்கள் கடமையை உணர்ந்து, செய்ய வேண்டியதைச் செய்யத் தயங்கா என்று நம்புகிருேம். 'கைவல்ய விஷயத்தில் ஸ்ரீ தேசிகனுடைய நிர்ணயமே யுக்தமானது' என்பது முதலில் ஸ்தாபிக்கப்பெறும். ஸ்ரீ ஸுதர்சனம் தன் கருத்தை மாற்றிக்கொண்டால் ஸ்ரீ ப்ரியா விவாதத்தில் தலையிடாது. இல்லையென்ருல் எத்தனை வருஷங்களானலும் நம் பத்திரிகை விவாதத்தைத் தொடர்ந்து நடத்தும். விவாதத்தை ஆரம்பித்து வைத்தவர்கள்தாம் அதை முடிவுக்கும் கொண்டுவர வேண்டும்." [ஆக இவ்வளவும் திருக்கள்ளம் ஸ்வாமி வாசகங்கள்.]

ஸ்ரீமத் திருக்கள்ளம் ஸ்வாமி எழுதியுள்ளவற்றுள் யதார்த்தமும் விலையுயர்ந்ததுமான வார்த்தை ஒன்றெ (அதாவது) நிஷ்க்ரஷ்டும் [illegible]ந்ய: [illegible] லக்ஷ்மணாசார்ய [illegible]* என்கிற தேசிக திவ்யஸூக்தியை யெடுத்துக்காட்டி ஸ்ரீ பாஷ்யகாரர் திருவுள்ளத்தை நிஷ்கர்ஷித்துக் கூறவல்லவர் தேசிகன் தவிர வேறு எவருமில்லை —என்றெழுதியிருப்பது. இது ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் என்று எத்தனை

தடவை சொன்னாலும் மிகையாகாது. இந்த வார்த்தையில் ஸந்தேஹ விபர்ய யங்கள் கொள்பவர் ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானத்தில் ஒருவரு மிருக்கமாட்டார்; இருந்தால் அவர் ஸ்ரீ வைஷ்ணவரல்லர். *மானிடவரல்லரென்று என்மனத்தே வைத்தேனே* என்ற திருமங்கைமன்னன் திருவாக்கின்படியும் கூறுவேன்.

இந்த ப்ரகரணத்தில் பலபல விஷயங்கள் விமர்சிக்கவேண்டியவை-விளக்க வேண்டியவை யுள்ளன. விரிவுக்கு அஞ்சாமல் விளக்குகிறேன் ஸ்ரீ தேசிகனுக்கு எழுநூருண்டு நிறைவு கொண்டாட்டம் ஸமீபத்தில் விசேஷமாக நடந்திருப்பதால் தேசிகனுடைய காலம் அனைவர்க்கும் தெரிந்திருக்கிறது. அந்த காலம் முதற்கொண்டு தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளைக் கையாண்ட ஆசாரியர்களும் வித்வான்களும் தென்கலை ஸம்பிரதாயத்தில் எத்தனைவர்? என்பதற்கு ஒரு ஜாபிதா எடுக்கவேண்டும். கேண்மின். தேசிகனுடைய ஸமகாலஸ்தரும் தேசிகனை விட பிராயத்தில் மூத்தவருமான வாதிகேஸரிஅழகியமணவாளச்சீயர் தாம்பணித்த தத்வதீப தீபப்ரகாச நூல்களில் தேசிக ஸூக்திகள் பலவற்றைக் கையாண்டிருக்கிருர். தேசிகன் பரமபதித்த வருஷத்திற்கு அடுத்த வருஷத்தில் திருவவதரித்தவரான மணவாளமாமுனிகள் தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களில் தேசிக ஸூக்திகளைக் கையாண்டிருக்கிருர். (விளக்கம்.) ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்து பல வாக்யச்ரேணிகள்; *ஸத்புத்திஸ் ஸாதுஸேவீ* இத்யாதி ந்யாஸ விம்சதி ச்லோகம் பூர்தியாக. தத்வமுக்தாகலாபத்திலிருந்து *[illegible]* என்கிற ச்லோகவண்டம். இத்யாதி .... .... மணவாள மாமுனிகளுக்குப் பிறகு சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்ய ஸ்வாமியைப் பற்றி எழுதவேண்டுமோ? அவர்க்குப் பிறகு ஏறக்குறைய இற்றைக்கு நானூறு வருஷங்களுக்கு முன்பு எழுந்தருளியிருந்தவரும் காஞ்சீபுரம் கீழகோபுரவாசலில் விளங்கும் மடத்திற்கு ஸ்தாபகருமான ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி பணித்ததும் [illegible] ஸ்ரீகோசங்களில் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளதும் உத்க்ரந்தங்களில் பரிகணிதமுமான [illegible]த்தின் தொடக்கத்தில் *[illegible]* என்கிற சுலோக முள்ளது. இதன் பொருள் யாதெனில், ஆழ்வான், அவருடைய திருக்குமாரரான பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை. மணவாள மாமுனிகள் முதலானரும், ச்ருதப்ரகாசிகாபட்டர், நிகமாந்தகுரு. தொட்டயாசார்யர் முதலானருமான [illegible]கள் என்னுள்ளத்துள்ளே உறையக்கடவர்கள் — என்பதாம் .... .... இந்த ஜீயர் ஸ்வாமிக்குப்பிறகு, மைஸூர் மண்டயம் அனந்தாழ்வாள் ஸ்வாமி தாம்பணித்த வேதாந்தவாதாவளியில் தேசிகஸூக்திகளை அபரிமிதமாகக் கையாண்டிருக்கிருர். இவர்க்குப்பிறகு ஸ்ரீ காஞ்சீபுரியில் அறுபது வருஷங்களுக்கு முன்பு எழுந்தருளியிந்தவரும் வித்வத் ஸார்வபௌமராய் விளங்கினவரும், குன்றபாக்கம் சிமாச்சார் ஸ்வாமியென்று ஜகத்ப்ரஸித்தருமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி தாம் பணித்துத் தாமே அச்சிடுவித்த([illegible])தத்வரத்தாவளீக்ரந்தத்தில் *[illegible]* என்று ச்லோகமிட்டிருக்கின்ருர்.

ஆக இப்படி தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்கள் அந்நாள் தொடங்கி அநவரதமாக தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளைக் கையாண்டும் அவரைத் துதித்தும் வந்திருக்கிறார்களென்பதை நாமெடுத்துக் காட்டினது போல, ஸ்ரீமத் திருக்கள்ளம் ஸ்வாமி எடுத்துக்காட்டவேண்டுவது – வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்களிலும் இங்ஙனேயுள்ளார்கள் – என்பதாம். இதையெடுத்துக்காட்டவேண்டுவது மிகமிக அவசியமானது. வடகலை ஸம்பிரதாயத்தில் கோபாலதேசிகன் என்றும் திருக்குடந்தை தேசிகன் என்றும் வழங்கப்பட்டு வருகிற ஒரு ஸ்வாமிக்கு முன்னே – ஆழ்வார்களை ப்ரஸ்தாவித்தவரோ, ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் முதலான ஆசாரியர்களை ப்ரஸ்தாவித்தவரோ, கிம்பஹுநா ? வேதாந்ததேசிகனை ப்ரஸ்தாவித்தவரோ ஒரு வ்யக்தியும் கிடையாது. காட்டமுடியாது என்பதை ஆணையிட்டுரைப்பேன். காட்டப்புகுந்தால் தேசிகன் திருக்குமாரரான நயினாராசார்யரொருவரைக் காட்டலாம். இதை நாம் ஆக்ரஹத்தினால் எழுதுகிறோமல்லோம். "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்" என்றதையும், "யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ" என்றதையுமறிந்திருந்தும் தத்வஜிஜ்ஞாஸயா எழுதினபடி. வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்கள் புதிதாகத் தோன்றினவர்களென்று நாம் சொல்லுகின்றிலோம், நெஞ்சிலுமெண்ணுகின்றிலோம். தேசிகனோடு தொடர்பை ஏறிட்டுக்கொண்டது புதிது, 200 – 250 ஆண்டுகட்குப் பிற்பட்ட காலத்தில் என்கிறோமத்தனை. இதை மறுக்கவேணுமானால் – அந்நாள் தொடங்கி இடையறாமல் தேசிகஸூக்தி ப்ராவண்ய ப்ரகாசகர்களும் தேசிக ப்ரசம்ஸாபரர்களும் வடகலை ஸம்ப்ரதாயத்தில் இருந்துவருகிறார்கள் என்று ஆர்ஜவத்துடன் நிரூபித்துக் காட்டியாகவேண்டும்.

இந்த ப்ரகரணத்தில் ஒரு இதிஹாஸம் செவிப்பட்டதை உள்ளபடியெழுதுகிறேன். திருமலை திருப்பதியில் ப்ரதிவாதிபயங்கரத் திருமாளிகைத் தலைவர் அண்ணா வேதாந்தாசாரியர் ஸ்வாமி யென்று ப்ரஸித்தராயிருந்தார். அவர்க்கு ஹைதராபாத் ப்ராந்தத்தில் சிஷ்யர்கள் விசேஷமாக இருந்தார்கள். [இற்றைக்கும் இருக்கிறார்கள்.] அந்த ஸ்வாமி ஹைதராபாத் நகரத்தில் கந்திகல்மெட்டு என்னுமிடத்தில் சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதியொன்று ப்ரதிஷ்டை செய்வித்தார். அதில் ஆழ்வாராசாரியர்களெல்லாரையும் ப்ரதிஷ்டை செய்வித்திருக்கிறார். வேதாந்ததேசிகனையும் ப்ரதிஷ்டை செய்வித்திருக்கிறார். அந்த ஆலயத்திற்கு கொம்பெல்லிவாரிகுடி என்று பெயர் வழங்கி வருகிறது. இற்றைக்கும் தக்ஷிணை பூஜையுடன் உத்ஸவாதிகள் விசேஷவைபவமாக நடந்து வருகின்றன. இது இங்ஙனேயிருக்க, காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் பெரிய அனந்தாசாரியர் ஸ்வாமி (காரணை ஸ்வாமி) என்று ப்ரஸித்தராயிருந்த மஹான் ஹைதராபாத் எழுந்தருளினபோது மஹாதனிகர்களான ஸேட்டுகள் ஸ்வாமிக்கு சிஷ்யர்களாயினர். அவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி (ஹைதராபாதில்) ஸீதாராம்பாக் என்னும் பெரிய தோட்டத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதியை ப்ரதிஷ்டை செய்வித்தார். [இந்த ஸன்னிதி இப்போது விசேஷவைபவம் பொலிய நடந்து வருகின்றது.] இதிலும் ஆழ்வாராசாரியர்களை யெல்லாம் எழுந்தருளப்பண்ணியிருக்கிறார். அப்போது

தேசிகனையும் எழுந்தருளப்பண்ணுவதைப்பற்றி விசாரம் நடந்ததாம். அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமி ஸாதிக்கக் கேட்டதை எழுதுகிறேன். திருமலை திருப்பதி ஆதிவாதிபயங்கரம் ஸ்வாமி கந்திகல்மெட்டு என்னுமிடத்தில் ஆலயநிர்மாணம் செய்வித்தபோது வடகலை வகுப்பினர் தேசிகனோடு உறவு கொண்டாடாமலிருந்ததனாலும், அப்போது (நமது நாட்டில்) எந்தக் கோவிலிலும் எவ்விதமான சண்டை சச்சரவும் இல்லாமலிருந்ததனாலும், அப்போது தேசிக விக்ரஹப்ரதிஷ்டைவிசாரமின்றிநடந்து விட்டதாம். அதற்குப்பின் 75 வருஷகாலம் கழித்து ஸீதாராம்பாகில் ஸன்னிதி ப்ரதிஷ்டை நடந்ததாம். அப்போது தென்னாட்டில் சில கோவில்களில் தேசிகனைப் பற்றி விசேஷசச்சரவுகள் நீதிமன்றங்களிலுமேறி மிக்க களேபரமாயிருந்ததாம். அதனால் விலை கொடுத்து வினைவாங்க வேண்டாமென்று பெரிய ஸ்வாமி ஸாதித்து விட்டாராம். ஸ்ரீ காதி ஸ்வாமி இச் செய்தியை பாம்பே மகாநகரத்தில் பனஸவாடியில் தாம் திருவேங்கட முடையான் ஸன்னிதி திருப்ரதிஷ்டை செய்தருளினபோது பலருமறிய ஸாதித்தருளினார்.

இக்காலத்தவர்கள் 'இது வொரு கட்டுக்கதை' என்று ஸஹஸா சொல்லி விடக்கூடும். ,அன்னவர்கள் ஒன்று ஆலோசிக்கவேண்டும்; தேசிகனுடைய திருவவதாரஸ்தலமான கரஞ்சீபுரியில் விளக்கொளி ஸன்னிதியிலும் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் தேசிகனெழுந்தருளியிருக்கச் செய்தேயும், ஸ்ரீரங்கராஜ வீதியில் ஒரு புதிய ஸன்னிதி; விளக்கொளி ஸன்னிதிக் கெதிரேயே வேறொரு ஸன்னிதி; திருவரங்கம் பெரியகோயில், திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூதூர், திருவிந்தளூர் முதலானவிடங்களில் ஸன்னிதிக்குள் புராதனதேசிக திவ்ய மங்கள விக்ரஹம் ஸேவைஸாதிக்கச் செய்தேயும் வெளி நிலங்களில் வேறொரு ஸன்னிதி கட்டியிருப்பது எதற்காக? இந்த நிர்மாண ப்ராரம்பம் முதன் முதலாக எந்த வருஷத்தில்?... எவ்வூரில்? இதையெல்லாம் ஆராய்வாரில்லையே. மனத்தை நடுநிலையில் வைத்து விவேகிகளாய் இதை ஆராய்ந்தால், [எதை? இந்த நூதன நிர்மாணங்கள் எதற்காக? எப்போது ப்ராரம்பம் என்பதை], உண்டிராக்கிடக்கும்போது ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்த்தால், எவ்வளவோ மருமங்கள் விள்ளுமே. நீதி மன்றங்களும் ஸாக்ஷியாக விளங்குகின்றனவே.

இனி, தேசிக க்ரந்தங்களினுள்ளேயிறங்கி ஆராய்வோம். வடகலை வகுப்பில் வித்வான்கள் இல்லாமற்போகவில்லை, விவேகிகள் இல்லாமற் போகவில்லை. ஐம்பது வருடங்களுக்கு மேலாக அடியேன் எழுதிவரும் நூல்களைப் பாராதாருமில்லை. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * [illegible] .... [illegible]* என்கிறார். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் *சோம்பாதிப்பல்லுருவையெல்லாம் படர்வித்தவித்தா !* என்றருளிய பாசுரத்தை பட்டர் மொழிபெயர்த்தபடி. ஸஹஸ்ரநாமத்தில் * அநிர்விண்ணநாம பாஷ்யத்திலும் எம்பெருமானுடைய சோம்பலில்லாமையை ([illegible]) ஸாதிக்கிறார். எம்பெருமானைப் போலே அடியேனும் சோம்பலின்றியெழுதி வருகிறேன். என்றேனுமொரு நாள் பயன்படுமென்கிற நசைதான் எம்பெருமானுக்கு மடியேனுக்கும். இனியாவது பயன்படவேணும்.

ஆக்ருதம் நம் திருக்கள்ளம் ஸ்வாமி எழுதியிருப்பதில்—"ஶரணாகதி செய்தால்தான் எம்பெருமான் மோக்ஷமளிப்பனென்று தேஶிகன் மதம்; எம்பெருமான் தனது நிர்ஹேதுக க்ருபையினால் மோக்ஷமளிக்கிருனென்று பிள்ளைலோகாசாரியர் மதம்" என்றெழுதியுள்ளார். இது மருளா? தெருளா? என்பதை உலகமறிய வேண்டாமா? இந்த ஆக்ஷேபத்தில் இந்த ஒரு விஷயமேயன்று, மற்றும் பல விஷயங்களையும் விஜ்ஞாபிக்கிறேன். பிள்ளைலோகாசார்யர் என்ன ஸாதித்திருக்கிருரோ, அதைத்தான் தேசிகன் ஸாதித்திருக்கிருர் என்று கண்ணாடிபோல் காட்டுகிறேன். இந்த்ரஜாலமன்று. ஸாப்புடுவித்யையன்று. கண்ணுடையீர்! காண்மின். பிள்ளைலோகாசார்யர் ஸாதித்திருப்பதை நம் திருக்கள்ளம் ஸ்வாமி காட்டியாயிற்று. [எம்பெருமான் தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே மோக்ஷமளிக்கிருனென்பது ஸ்ரீ லோகாசார்ய மதம்—என்றெழுதியுள்ளார்.] இதைத்தான் தேசிகன் ஒரு காரிகையாக [அநுஷ்டுப்பாக] ஆக்கி வைத்துள்ளார். "த்ராணே ஸ்வாமித்வௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்ய விஶிஷ்டா கருணா விபோ:" என்பது ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார ஸ்ரீ ஸூக்தி. இதன் பொருளை நாம் விவரிக்கவேணுமோ? த்ராணே—சேதநர்களை எம்பெருமான் ரக்ஷிக்குமிடத்து என்றபடி. இங்கு ரக்ஷிக்கையாவது யதாபேக்ஷம் ஸுகாதிகளை யதேஷ்டமாகக் கொடுத்து ஸம்ஸாரிகளின் குடும்ப வாழ்க்கையை நிர்வஹித்துப் போருகையன்று; * நலமந்தமில்லதோர் நாட்டையளித்து உய்யச் செய்கையேயாம். அதில் [ஸ்வாமித்வம் ஔசித்யம்] ஸொத்துக்கு உடையவன் தன் ஸொத்தை ரக்ஷிக்கக் கடவனாகையாலே ஸர்வஸ்வாமியான எம்பெருமானுக்கு ஸ்வகீய ஸம்ரக்ஷணம் கடமையாயிற்று. இதற்குச் சில வியாஜங்களைக் கல்பித்து வைக்கிருன் [ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:] பக்தி ப்ரபத்திகளென்று சிலவற்றை வைக்கிருன். [ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா விபோ: கருணா ப்ரதாநஹேது:] * விபோ: கருணா ப்ரதாந ஹேது: * என்ருல் போதாதோ? கருணைக்கு (ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா) என்ருெரு விஶேஷணமிடவேணுமோ? என்பது இங்கு முககியமாக விமர்ஶிக்கத்தக்கது. ஸர்வமுக்தி ப்ரஸங்கம் என்ருெரு வாதம் கிளம்புமே; அதைச் செம்மட்டியிட்டு அடிக்க இந்த விசேஷணம், ஆசார்ய ஹ்ருதயத்தில் "பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது" என்றுள்ள சூர்ணையை ஆரத்தழுவினபடி. இந்த காரிகையில் * ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண: * என்ருென்று இருக்கையாலே அதைப் பிடித்துக் கொண்டு மெல்லுவர்கள் சிலர். அதைப்பற்றி தேசிகன் எவ்வளவு ஸாதித்திருக்கிருர் தெரியுமோ? சோம்பலைவிட்டு எழுதுகிறேனென்று முன்னம் ப்ரதிஜ்ஞை செய்திருப்பதை மறவேல்மின். ஸஹகாரிகள் ஒன்றன்று, இரண்டன்று; அவற்றைப்பற்றி ஒரே வார்த்தையில் முடித்திட்டார் தேசிகன். நியாயஸித்தாஞ்ஜநத்தில் *கிம் புநஸ் ஸஹகாரிணும்* என்ருர். இந்த ச்லோகம் பூர்த்தியாகத் தெரியுமன்ரே? * இயம் கேவல லக்ஷ்மீஶோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே — அதற்குமேல் தான் கிம்புநஸ் ஸஹகரிணும். அந்த ஸஹகாரிகளின் ஸமாசாரத்தையும் ஸ்வாமி தாமே பலபல விடங்களில் ஸாதித்தருளுகிருர் ... .... இங்கே ஒரு தேசிக திவ்யஸூக்தியைக் காட்டுகிறேன். அஃது ஒன்றே போதுமானது தெளிவுபெறுவதற்கு. (அதாவது)

(ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரே) *கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும் இது பராதீனமுமாய் அல்ப விஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் தான் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணுந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக எண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசித மன்று .... 'என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே' யென்றும் *இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக எண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்.* இவ்வளவும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரஸ்ரீஸூக்திகள்.

இந்த வாக்யஶ்ரேணியில் ஒவ்வோரெழுத்தும் பொன்னேபோல் போற்றத் தக்கதன்றோ. இதுதான் பிள்ளைலோகாசார்யருடைய மதம்; இதுதான் மணவாள மாமுனிகளின் மதம்; இதுதான் ஸகல தென்னாசாரியர்களின் மதம்; இதுதான் தென்கலையாருடைய மதம். [இதுதான் நிகமாந்த மஹாகுருவின் ஸித்தாந்தம் — என்பதைச் சொல்லவேணுமோ?] இதுவேதான் வடகலையாருடைய ஸித்தாந்தமும்" என்று நம் திருக்கள்ளம் ஸ்வாமியும் திருவுள்ளமுகந்து எழுதிவிட்டால் சண்டை ஏது? சச்சரவு ஏது? ஆனால் இதரஸம்ப்ரதாயஸ்தர்கள் என்ன ஸாதிக்கப் போகிறார்கள் தெரியுமோ? இப்போதே தெரிவிக்கிறேன்; நாம் எடுத்துக்காட்டின ஸ்ரீஸூக்திகளை விட்டு விட்டு வேறுசில தேசிகஸூக்திகளைத் தேடி யெடுத்துக் காட்டி "இங்கே இப்படியிருக்கிறது பாருங்கள்; இதைப்பாருங்கள்! இதோ பாருங்கள்!" என்று ஸாதிக்கப்போகிறார்கள். அப்போது, "பரஸ்பரவ்யாஹததூஷண முள்ளது" என்று ஸ்தாபிப்பதாகத்தான் தேறும்.

ஸ்ரீ தேசிக ரஹஸ்ய ஜாலங்களில் விரோத பரிஹார மென்பது ஒரு நூல்; அதிலுள்ள சில ஸ்ரீ ஸூக்திகளை யீண்டெடுத்துக் காட்டுகிறேன், காண்மின்;—

"பக்தி போலே ப்ரபத்தியும் சாஸ்த்ரீதமான உபாயமாய் நின்றது. இது பகவத் ப்ரஸாத வ்யவஹிதமாகையாலே ஸாக்ஷாத் பல ஹேதுவன்று என்னுமிடமும் பக்த்யாதிகளுக்கும் துல்யமாயிருந்தது. இப்படியிருக்க ப்ரபத்தியை உபாயமன்றென்று விசேஷித்துச் சொல்லுகிறவர்களுக்கு தாத்பர்யமென்னென்னில், சாஸ்த்ரங்கள் பக்தியைப்போலே ப்ரபத்தியையும் உபாயமாக விதிக்கச் செய்தேயும் இவ்வுபாயத்தினுடைய அநுஷ்டான சரீரத்தைப் பார்த்தால் ந்யாஸப்ரதாநமாய் நீயே உபாயமாக வேண்டுமென்று அபேக்ஷிக்கிறபடியே ஸ்வீகாரம் பண்ணிக்கொண்டு உபாயாந்தரஸ்தானத்திலே நிற்கிற ஈச்வரனுடைய நிரபேக்ஷோபாயத்வம் இவ்வித்யைக்கு *வேத்யாகாரமாய் நிற்கையாலே வித்யாந்தரங்களிற் காட்டில் இவ்வாசி* யைப்பற்ற ப்ரபத்தியை விசேஷித்து உபாயமன்றென்றார்கள்".

இவை அந்த விரோத பரிஹார ரஹஸ்ய ஸ்ரீ ஸூக்தி. இத்தால் ஆபத்தியின் அநுபாயத்வ வாதம் கண்ணழிவற்றதென்று தாமே இசைந்தருளினராயிற்று. இந்த ஸ்ரீ ஸூக்தி ரத்னங்களை ஸ்வாமி எதற்காக ஸாதித்தருளினரென்று விமர்சிக்கவேண்டாவா? கேண்மின்; "ஆபத்தியுங்கூட உபாயமன்றென்று சிலர் அதிவாதம் பண்ணினர்கள்" என்று தாம் பணித்திருந்ததற்கு அநுசயித்து இது ஸாதித்தருளினபடியென்று சொற்போக்கில் நன்கு விளங்கவில்லையா? * ஷூஃதீ ஷூயியா ஷூாய-ூ௦ ஷஃஷூிூ நதூஷஹூதி ஊா௦ ஷஃயழ* என்ற ந்யாஸதசக ஸூக்தியொன்று போதுமே. (ஷூஃதூயியா) என்றால் போதாதா? (ஷஃயியா) என்றும் ஸாதித்திருப்பதைக் காணவேண்டாமா? மேலே காட்டிய விரோத பரிஹார ஸ்ரீ ஸூக்தியை ந்யாஸதிலகத்தில் *ஹைதஃஹெவெதூயெ விஃஹெ-ூ* என்கிற ஶ்லோகத்தினால் தம்முடைய ஸித்தாந்தமாகவே யன்றோ தலைக்கட்டினர்.

ந்ருஸிம்ஹப்ரியாவிலிருந்து கீழே அடியேனெடுத்துக்காட்டியுள்ள ஸ்ரீமத் திருக்கள்ளம் ஸ்வாமியின் வாக்யஶ்ரேணியில் (உபக்ரமத்திலேயே) "வடகலை தென்கலை ஸம்பிரதாயங்களுக்குள் சுமார் பதினெட்டு விஷயங்களில் அபிப்ராய பேதம் இருக்கிறது." என்றுள்ளது. இங்கு அடியேன் விஜ்ஞாபிக்கிறேன்; பதினெட்டுமில்லை, எட்டுமில்லை. முக்கியமாக ஐந்தாறுதான் இருக்கும். அஸக்ருந் நமஸ்காரம், விதவாவபனம், ஏகாதசீச்ராத்தம், மணி யடித்தல் ...... போன்ற விஷயங்களைச் சேர்த்துக் கொண்டால் பதினெட்டு என்ன? இருபத்தெட்டு முப்பத்தெட்டும் தேறும். ரஹஸ்ய ஆஷாநத்தில் ஐந்தாறுக்குமேல் தேருது. வாத்ஸல்யம் தொஷஹொமதூகூமா? தோஷாதபி-ூகூமா? ஃயை வாதஃஃவதஃஃவிகூமா? வாதஃஃவ நிராதிகீஷை-ூயா? ...... இத்யாதி விசாரங்கள் லகுவானவை. அப்படிப்பட்டவற்றைத் தள்ளிக் கணக்கிட்டால் ஐந்தாறுக்குமேல் தேறவே தேருது. அவற்றில் ஸ்வாமி தேசிகன் திருவுள்ளம் தென்னாசார்ய ஸம்பிரதாய ஸித்தாந்தத்திற்கு ஓர் அணுவளவும் மாறுபடாதது – ஈஷத்தும் மாறுபடாதது – என்பது பேர்க்கவும் பேராதது. ஆதிஜ்ஞையோடு நிற்பவனல்லனே அடியேன். நின்று நிரூபிக்கிறேன். நன்குநிரூபிக்கிறேன். கீழே ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்து அடியேன் எடுத்துக்காட்டின விஷயங்களுக்குச் சார்பாக தேசிகன் ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களிலும் ஸாதித்துள்ளார். எவ்வளவு காட்டவேணும்? முக்கியமானவற்றைக் காட்டுகிறேன்.

(கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷாயாம்) (*நிஜகர்மாதீத்யாதி ச்லோக விவரணே). "முக்தவ்யாபார ந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாத் இதி பாவ; அந்தத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ர உபாய:" என்று ஸாதித்திருப்பதைப் பன்முறையும் காட்டியிருக்கிறேன்.

(கீதாபாஷ்யதாத்பர்ய சந்த்ரிகாயாம்) 8 – 14. "அநந்ய சேதாஸ் ஸததம்" என்றவிடத்து பாஷ்யத்தில் "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே மத்ப்ராப்த்யநுகுண - உபாஸநவிபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்தமத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:, "யமேவைஷ வ்ருணுதே

தேந லப்ய: ■ இதி ஹி ச்ருயதே என்ற விடத்து (தாத்பர்ய சந்த்ரிகையில்) ■உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ ஶங்காவ்யுதஸநாய ச்ருதிமூலதாமாஹ — யமேவேதி.■ என்றுள்ளது. இதையும் பலகால் எடுத்துக்காட்டியுள்ளேன்.

மேலேகாட்டிய ஸ்ரீதார்த்தஸங்க்ரஹாக்ஷாஸூக்திகளில் (முக்தவ்யாபாரங்யாயேந) என்று ஸாதித்திருப்பதுண்டே, அந்தோ! இதன் சுவையை ஆரே அறிவார்! இங்கு நாம் செய்வதை யெல்லாம் அங்கு முக்தர்களும் செய்கிறார்கள். அவர்களில் "உபாயாநுஷ்டானம்ஆச்சுதோ?" என்றுவிளவுவாருமில்லை; "உப்ாயாநுஷ்டானத் திற்காகத்தான் வந்திருக்கிறோம்" என்று விடை கூறுவாருமில்லை. ரக்ஷையில் உடனே "நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸம்ஜாதி ...:" என்று ஸாதித்த ஸ்ரீஸூக்திக்கு ■விண்ணெல்லாமுண்டோவிலே? ஸ்வவ்யாபாரத்தில் உபாயபுத்தி பண்ணுகிறவர்களைக் கண்டிக்கும் வார்த்தையன்றோவிது? அப்படி பண்ணுகிற மஹாநுபாவர் யார் என்பது தெரியவேணும். நாங்கள்தானென்ன வேணுமிவர்கள். அடுத்த தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீஸூக்தியில் ■நாயமாத்மாஶ்ருதி யில் ஸ்வஹாநீநர்களின் அகாண்ட தாண்டவங்கள் அடியறுக்கப்பட்டிருப்பதை ஆழ்ந்து பார்க்கவேண்டா; மேலெழப்பார்த்தாலும் போதும்.

நியாய ஸித்தாஞ்ஜநத்தில் – ■ ... ■ என்கிற காரிகை ஐம்பது வருஷகாலமாக வாதவிவாதங் களில் அடிபட்டுக்கொண்டிருக்கிறது. இதைக் காணுக்கண்ணிட்டிருக்கிறார்கள். இதில் இரண்டு விஷயம்; [இயம் ப்ரபத்தி: ஸ்வஹேதுத்வதியம் ...] என்றது தெரிந்த விஷயம்; ஆபத்தியின் அநுபாயத்வம் ... மென்று காட்டினபடி. ■... ■ என்றதைது மற்றொன்று. இங்கு (கேவல) பதம் எதற்கு என்பது தனியாராய்ச்சி. (ஸ்வஹேதுத்வதியம் ருந்தே) என்று எதற்காக ஸாதித்தார்? யாரைநோக்கி ஸாதித்தார்? என்பது தலையான ஆராய்ச்சி. ஹேதுவென்பாரைத்தானே இதனால் கண்டிக்கிறார். அவர்கள் யார்?

■உபாயஸ் ஸ்வஹாப்தே: என்கிற ரஹஸ்யத்ரயஸாரச்லோகத்தின் ஈற்றடி யில் ஹேது:, காரணம், பீஜம் .... .... என்றதே ... என்று ஏன் ஸாதித்தார்? ஈஶ்வர:, ப்ரபு:, விபு: என்றதே *அகில நிர்மாணநிபுண:■ என்று ■... ... என்ற அலங்காரத்திற்கு லக்ஷ்யமாக ஸாதித்தது எந்த அபிப்ராயத்தை உட்கொண்டது? கேண்மின்; ■ஸ்ரஷ்ட்யவதா ராதிமுகத்தாலே பண்ணின ஸுக்ருதமும் என்கிற பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீஸூக்தி யைத் தழுவியருளிச்செய்ததென்பது பரமார்த்தம். வேறுண்டாகில்நின்றுகூறுமின்.

கீழே ■கேவல லக்ஷ்மீஶோபாயது காரிகா வ்யாக்யானம் வந்தபடியாலே பிராட்டி யின் உபாயத்வ விஷயத்திலும் ஸ்வாமி தேசிகனுடைய ஸித்தாந்தம் மிகத் தெளி வாக எடுத்துக் காட்டப்படுகிறது.

இவ்விஷயத்தில் ரஹஸ்யக்ரந்த ஸூக்திகளும் சதுச்ச்லோகீபாஷ்ய ஸூக்திகளும் கண்ணாடி போலுள்ளன காண்மின்; "எம்பெருமான் தான் மோக்ஷ மளிப்பவன்; பிராட்டிக்குப் புருஷகாரத்வமேயுள்ளது. என்கிற தென்னாசார்ய ஸம்பிரதாயமே ஸ்வாமி தேசிகனுக்கும் ஸித்தாந்த மென்பதில் விப்ரதிபத்தியுண் டாக ஈஷத்தாவது வழியுண்டா? என்று பார்க்கவேணும் விவேகிகள்.

(ரஹஸ்யரத்நாவளியில்) * ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்........ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள். * என்பது நிஸ்ஸந்தேஹ நிர்விவாத ஸ்ரீஸூக்தி. (ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயே) *ரக்ஷணஹேதுவாகிருளென்று தாமே செய்தருளின விவரணம்.

(சதுச்ச்லோகீபாஷ்யே) * மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம் * * அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே * * ஸபத்நீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்.* என்று ஸாதித்துள்ளவை அரண்யருதிதமா? மேலே *ஸ்ரீ விஷ்ணு சித்தார்யாதி பூர்வாசார்ய ஸூக்திகளை இந்த ப்ரகரணத்தில் உதாஹரித்தருளியிருப்பதும் காண்க.

மேலே உதாஹரித்த தமிழ் வாக்யங்களிலும் ஸம்ஸ்க்ருத வாக்யங்களிலும் கிஞ்சித்தாவது ஸந்தேஹத்திற்கோ விப்ரதிபத்திக்கோ இடமுள்ளதாவென்று பார்க்கவேணும். உண்டெனில் அருளவேணும். இவ் விஷயத்தில் கலஹாதீநர்களின் க்ரந்தச் சண்டைகளோ அபாரம்.

அடுத்தபடி. சரணாகதி, ஸந்யாஸம், ஸ்வரக்ஷாபரம், உபாயாநுஷ்டானம்....... என்னும் விஷயத்திலும் ஸ்வாமி தேசிகனுடைய திருவுள்ளம் வெட்ட வெளிச்சமாகவுள்ளது. இதைப்பற்றியும் தமிழ், ஸம்ஸ்க்ருதம் இரண்டிலும் எழுதியுள்ளார் ஸ்வாமி. (சரணாகதிகத்யபாஷ்யாவஸாநே) *ஏதேந அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கநமூல பகவத்அப்ரஸாதேந ஸம்ஸரதோ மே பகவத் க்ருபாமூலக ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச்சாரண அநூச்சாரண பூர்வக ஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே ப்ரஸாதநேஷு அஸ்மாத் அப்யதிகஸ்ய அபாவாத் விச்வஸ்தோ நிர்ப்பரோ நிர்ப்பயஸ் ஸந்துஷ்டோ பவேதி நியமிதம் பவதி.* (ரஹஸ்யத்ரயஸாரஸூக்தி விசேஷமொழி பெயர்ப்பு இது.) அந்த ஸூக்திகளையும் கேண்மின். [நாம் பலபல தடவை எடுத்துக் காட்டியவை] "அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப்போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத் க்ருபையடியாகவுண்டான ஸதாசார்யகடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹஹேதுக்களையெல்லாம் க்ஷமித்து.* ஐ.தி.

இவற்றுள் முன்னே அவதரித்தது ஸம்ஸ்க்ருத வாக்யமா? தமிழ் வாக்யமா? என்பது அடியேனுக்குத் தெரியவில்லை. அந்யூநாநதிரிக்தமான மொழி பெயர்ப்பு என்பதில் ஐயமில்லை. ஈதொன்று கேளீர்; பஞ்சாசார்ய பதாச்ரிதரென்று ப்ரஸித்தரான எம்பெருமானார் இன்னாரிடத்தில் ஸ்ரீ ராமாயணம் கேட்டார், இன்னாரிடத்தில் திருவாய்மொழிப் பொருள்கேட்டார்; இன்னாரிடத்தில் ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார். இன்னாரிடத்தில் அருளிச்செயலோதி நல்வார்த்தைகள் கேட்டார் .... .... என்றிப்படி இரண்டு ரஹஸ்யக்ரந்தங்களில் எழுதிவைத்திருக்கிற ஸ்வாமி தேசிகன் –

"இன்னுரிடத்தில் அத்ருஷ்டார்த்தம் பண்ணிக் கொண்டார்'' என்று எழுதிவைக்க வில்லையே; ந்யாஸதிலகத்தில் ''லக்ஷ்மணமுநேர் ஸ்வதா விதீர்ணம் ச்ருத்வா வரம்'' என்று குன்றிலிட்ட விளக்காக ஸாதித்திருக்கிருர்; அந்த வரம் எவ்விவமான தென் பதை உடனே "தத்ர நாவஸ்தாவலிப்தே மயி" என்பதனுல் தாமே விளக்கிவைத் தார். ஸ்ரீ பாஷ்ய மங்களச்லோகத்தில் *விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்றதில் (விவித) (வ்ராத) என்கிற இரண்டு சொற்களிட்டதன் ப்ரயோஜநத்தை ச்ருதப்ரகாசிகையில் விவரித்திருப்பதையும், அதை ஸ்வாமி தத்வடீகையில் மிகமிக விளக்கியிருப்பதையும் வித்வான்கள் நடுநிலையில் நின்று நோக்கவேணும். தற்கா லம் இவ்வளவோடு நிற்கிறேன். இதெல்லாம் அடியேனெழுதியது - தேசிகன் பக்கலில் தென்கலையார் மாச்சரியம்கொள்வதற்கோ. அவர் வேறு ஸம்ப்ரதாயஸ்தர் என்று நினைப்பதற்கோ அணுவளவும் ப்ரஸக்தியில்லை யென்று ரூதலிப்பதற்காகவே யன்றி விவாதத்தை மேன்மேலும் வளரச்செய்வதற்கன்று.

உபஸம்ஹாரம்—இந்த விரிவுகளெல்லாம் கைவல்ய விஷய விசாரத்தி லிருந்து தோன்றியவையாதலால் அதைப்பற்றி இரண்டொரு வார்த்தை பேசித் தலைக்கட்டுகிறேன். ''மதிராபிந்துமிச்ரமான பாதகும்பமய கும்ப மத்ய கங்கா ஸலிலம் போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம் '' என்கிற திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஸ்ரீ ஸூக்தியை மறுப்பது பலர்க்குத் தெரியாதபடிக்கு ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் *உபேத்யாவஹத வாஸுதேவ ப்ரபத்த்யாதிகாரிகையை அநந்யதர மாக இட்டருளினதுபோலே கைவல்ய விஷயத்திலும் கீதா பாஷ்ய ஸூக்தி ப்ரகாசகலத் தைப்பற்றி ஒரு காரிகை இட்டருளியிருக்கலாம். அன்றியும் நடாதூரம்மாளருளிச் செய்ததத்வஸாரத்தில் *ஆதாவீச்வரதத்தயைவ புருஷ:....* இத்யாதி ச்லோகத்தை யும் அதற்கு மூலமான ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியையும் ஸ்வாமி தேசிகன் கடாக்ஷித் தருளி, அதிகரண ஸாராவளியில் * ஸாக்ஷாதீசப்ரஸாதாத் ப்ரபவதி ஸகலாநர்த்தநிவ்ருத்திர் ஜ்ஞாநம் ஸஜ்ஜம் ஸஜேத* என்றருளிச் செய்ததுபோல, கைவல்ய விஷயத்திலும் நியாய ஸித்தாஞ்ஜனத்தில் *கீதாஸாக்ஷாத்க்ருதிர்விஷயாநாம் ஜ்ஞாநம் ஸஜ்ஜம் ஸஜேத* என்று ஒரு சுலோகமிட்டிருக்கலாம்; அப்படியன்றிக்கே கீதா பாஷ்ய ஸூக்தி அஸ்வரஸ மென்றே பேசி முடித்திருப்பதனுல் இவ்விஷயத்தில் விவாதத்தை வளரச் செய்யாமலிருப்பது நன்று. எந்த ஸூக்திக்கும் அஸ்வாரஸ்யகல்பன மின்றிக்கே நிர்வஹிக்கும் வழியொன்று காட்டினுல் அதை உகந்து ஏற்றுக் கொள்வது யுக்தமல்லவா?

தேசிகன் முதன் முதலாக ஸாதித்தருளின ஸம்ப்ரதாய பரிசுத்தி ரஹஸ்யத் தில் ஸ்ரீ பாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களொன்றிலும் அர்த்த விரோத மில்லை. யோஜநாபேதமாத்ரமேயுள்ளது" என்று அருளியதை இந்த ஸமீக்ஷை யினுல் விவரித்தோமாஞேம்.

(சுலோகம்) தேசிகஸூக்த்யநுஸாரேண யதிராஜமதம் ஸதா ।
தே ஸர்வே ஸமுபாஸந்தாம் ஸம்ப்ரதாயப்ரவர்த்தகா: ॥

ஸ்ரீமத் வேதாந்தாசார்ய ப்ரதிபந்நம் ப்ரயோஜநம் ।
தத்ர விப்ரதிபத்தீநாம் ஸம்ப்ரதாயமவர்த்தயத் ॥

ஸ்ரீவத்ஸ வேங்கடாசார்ய ஸம்ப்ரதாய ஸமீக்ஷா ॥

# ஸ்ரீராமாயணப் பகுதி

## "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹத்"

(ஸ்ரீ உ. வே. வித்வான் தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர், M.A.)

சக்ரவர்த்தி திருமகனார் அம்பினால் எய்யப்பட்ட மாரீசன், "ஹா லக்ஷ்மண! ஹா ஸீதே!" என்று பெருமாள் குரல்போலவே உரத்த குரலில் கதறியதைக் கேட்ட சீதாபிராட்டி அது பெருமாளுடைய கூக்குரலே யாயிருக்கவேணுமென்று நினைத்து மிகவும் வியாகுலப்பட்டு, இளையபெருமாளை உடனே சென்று தமையனை நோக்கவேணுமென்று கட்டளையிட்டனள். ஆனால் உண்மையறிந்த அவர் கொடிய காட்டில் பிராட்டியைத் தனியே விட்டுப்போக மனமில்லாமல், பெருமாளுக்கு தீங்கு விளைவிக்கவல்ல தீரன் மூவுலகிலும் ஒருவனுமில்லை யென்று விளக்கி ஆறுதல் கூறினார். பிராட்டி இதைச் சிறிதும் ஏற்கமாட்டாதவளாய் இளையோன்பேரில் அதிசங்கைபண்ணி மிகக் கொடிய சொற்களால் அவரை நிந்திக்க, அவர் அதைப் பொறுக்கமாட்டாமல் சினங்கொண்டு தானும் சில கொடிய சொற்களைப்பொழிந்து பெருமாளைத் தேடிச்சென்றுவிட்டார். உடனே ராவணன் அவ்விடம் வந்து பிராட்டியைக் கவர்ந்து இலங்கைக்குக் கொண்டுபோய்விட்டான். இது எல்லோருமறிந்த கதை.

மாயமானைப் பிடித்துத் தரவேணுமென்று தான் வேண்டியதும், இளைய பெருமாளைக் கொடுஞ்சொற்களால் துரத்தியதும் தான் இராவணனால் கவரப்பட்டு, பெருமாளைப் பிரிந்து, இலங்கையில் சிறைவாசம் செய்யக் காரணமாயிற்றென்று பிராட்டி பிறகு நன்கறிந்து அதற்காக மிகவும் வருந்தினாள். ஆனால் அவள் இதற்காக ஏதாவது ப்ராயச்சித்தம் செய்துகொண்டனளா, மன்னிப்பாவது கேட்டுக் கொண்டதுண்டா என்று ஆராயவேண்டும்.

திருவடியின் மூலம் பெருமாளுக்கு தூது அனுப்பிய பிராட்டியின் மொழிகளில் ப்ரஸித்தமான ச்லோகமிது—"மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்சய:, ஸமர்த்தாவபி யந்மாம் தௌ நாவேக்ஷேதே பரந்தபௌ". (ஸு. 38—48) இதன் பொருளாவது—"என்னை இச்சிறையிலிருந்து விடுவிக்கவல்லவரா யிருந்தும் அவ்விருவரும் என்னை இப்படி உபேக்ஷிப்பதற்குக் காரணம் என்னுடைய ஏதோ சிறிய பெரிய பாவமன்றி வேறில்லை." இதில் சிறிய பாவமென்பது பகவதபசாரமென்றும், பெரியபாவமென்பது பாகவதாபசாரமென்றும் பெரியோர்கள் விளக்கியுள்ளார்கள்.

இதைச் சிறிது விவரிப்போம். எம்பெருமானை விரும்பாமல் அற்பமான அர்த்தகாமங்களையே விரும்பும் நம்மைப் போலவே பிராட்டியும் பெருமாளுடன் கூடி யநுபவித்து வரும் நிலைமையில், அதை வெறுத்தனளோ என்று நினைக்கலாம்படி, மாயமானைப் பிடித்துத் தரவேண்டுமென்று அவரையே ஏவியது பெரும் தவறல்லவா? "பெரும! எனக்கு நீ வேண்டா, மாயமானே யமையும்" என்று சொன்னதோடொக்குமிது. இதுவோர் அபசாரம். இரண்டாவதாக அயோத்தியில், தந்தையின் உத்தரவினால் நாட்டைவிட்டு காட்டுக்குச்செல்ல நினைத்த பெருமாள், தன்னை கூட வரவேண்டாவென்று மறுத்ததைக் கேட்ட பிராட்டி, தானும்

கூடச்சென்றே தீருவேனென்று அடம் பிடித்து, "ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்" (ஆண்வேடம் பூண்ட பெண்) என்றாள், "சைலூஷ இவ மாம் ராம பரேப்யோ தாதுமிச்சஸி" (நாட்டியக்காரன் போல மனைவியை பிறர்க்கு விற்க நினைக்கிறீர்) என்றும் ஏசியது அபசாரமே யாகுமன்றோ? ஆக இவை இரண்டும் பகவதபசாரங்களாயின.

இனி பாகவதாபசாரமாவது கீழே விவரித்தபடி இளையபெருமாளை இங்கு நாம் அநுவதிக்கத்தகாத கொடிய சொற்களால் தாக்கியதுமல்லாமல், ஒரு பாவமுமறியாத பரதாழ்வானையும் இழுத்துப்போட்டுக்கொண்டு, அவ்விருவரும் பெருமாளுக்குத் தீங்கு விளைவிக்க சதிசெய்வதாக வசை கூறியதுமாகும். ஆக, இவையெல்லாவற்றையும் நினைத்தே பிராட்டி "மம கிஞ்சித் மஹத் துஷ்க்ருதம் அஸ்தி" என்று சொல்லிக்கொண்டபடி.

இப்பொழுது இப்பாவக்கின் பேச்சு எதற்காக வென்றால், "அடியாள் (அன்பினால்) ஏதோ அறிவுகெட்டுச்செய்த இக்குற்றங்களை அவ்விருவரும் பொறுத்துக் காத்தருளவேணும்" என்று பிரார்த்தனை செய்வதற்காக வென்றறியவேணும். மன்னிக்கவேணுமென்கிற வார்த்தையைக் காணோமே என்று மயங்காதீர்கள். இத்தூதின் ப்ரகரணத்தில் முக்கியமான வாக்கியம், "கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ, தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச சிரஸா சாபிவாதய" என்பதாம். இதன் பொருளாவது—"விசால மனம் படைத்த கௌஸல்யையார் மூவுலகையும் ரக்ஷிக்கவல்ல விச்வபதியை மகனாகப்பெறவேணுமென்று தவம்புரிந்து படைத்த திருக்குமாரரான பெருமாளுக்கு அடியாள் தலையால் வணங்கி குசலப்ரச்நம் பண்ணினதாக அறிவிக்கவேணும்." இவ்விடத்தில் லோகபர்த்தா என்று அடைமொழி யிட்டதும், தலையால் வணங்கச்சொன்னதும் கவனிக்கத்தக்கவை. பர்த்தாவாகையால் அவரவர்கள் செய்திருக்கக்கூடிய நன்மை தீமைகளைக் கணிசியாதே அனைவரையும் ரக்ஷிப்பதே அவருக்குப் பணியாகுமென்பதை நினைப்பூட்டி, தான் செய்திருக்கக்கூடிய பிழைகளைப் பொறுத்தருள வேணுமென்று வேண்டிக்கொள்ளவே தலையால் வணங்கச்சொன்னது. இப்படியொரு பிரார்த்தனை யில்லாவிட்டால், ஸாதாரணமாக நாயகி நாயகனைத் தலையால் வணங்க ப்ரஸக்தியில்லையன்றோ? ஆகையால்இவ்விடத்தில் அபராதக்ஷாமணமே உத்தேச்யமென்று தேறிற்று.

ஆக பிராட்டி பெருமாளிடம் அபராத க்ஷாமணம் செய்துகொண்ட விதம் காட்டப்பட்டது. இனி அடுத்த பல ச்லோகங்களால் இளையபெருமாளிடம் மன்னிப்பு வேண்டியது வெகு அற்புதம். கீழே விவரித்த "மமைவ துஷ்க்ருதம்" என்கிற சுலோகத்தில் "நாவேக்ஷே பரந்தபௌ" என்று இருவரையும் ப்ரஸ்தாவித்திருப்பதால் இருவரிடமும் மன்னிப்பு வேண்டினமை தோன்றும். ஆகிலும் "கௌஸல்யா லோகபர்த்தாரம்" என்கிற சுலோகத்தில் தனிப்பட பெருமாளிடம் தலைவணங்கி மன்னிப்பு வேண்டிக்கொண்டது போலவே, இளையபெருமாளிடமும் தனியாக மன்னிப்பு வேண்டியிருப்பது கவனிக்கத்தக்கது. பெருமாளுக்கு ஸந்தேசம் ஒரு ச்லோகம், இளையவருக்கு எட்டு ச்லோகங்கள். இதனால் அவரிடம் மன்னிப்பு வேண்டுவது அதிகம் இருக்கிறதென்பது வெளிப்படையாகிறது. இனி தூதுமொழியின் பொருளைக் கேளுங்கள். "மாலைகள், பல ரத்தினங்கள், இஷ்டமான பாதர்

கள், உலகில் வேறு யாராலும் அடையமுடியாத பெருஞ் செல்வம், இன்பமான வாழ்ச்சி. தாய், தந்தை ஆகியவற்றையெல்லாம் விட்டிட்டு, தமையனைப் பின் தொடர்ந்தவரும், ஸுமித்ரா தேவியின் ஸுபுத்ரனும், ஸுகங்களையெல்லாம் துறந்து தமையனுக்கு அநுகூலமாக நடந்துகொண்டு காட்டில் அவரை நோக்கிக் கொண்டு சென்றவரும், மஹாபுருஷலக்ஷணங்கள் பொருந்தியவரும், பெருமானைத் தந்தைபோலவும் என்னைத் தாய்போலவும் நடத்தி வந்தவரும், அன்று இராவணனால் நான் கவரப்பட்டதை யறியாதவரும், பெரியோர்களை யடிபணியுமவரும், மித பாஷியும், எனது மாமனுக்கு ஒப்பானவரும், அவருடைய பொறுப்பை நன்கு ஏற்றுக்கொண்டவரும், எவரைப் பார்த்து எனது பர்த்தா தனது தந்தை இறந்து விட்டதாக நினைக்கவே மாட்டாரோ, எவர் என்னைவிட அவருக்கு மிகவும் ப்ரிய மானவரோ, அப்படிப்பட்ட மிருதுஸ்வபாவரும், தூயவரும், ஸமர்த்தரும், பெருமாளுக்கு மிகவும் வேண்டியவருமான இலக்குமணனை நான் மிகவும் விசாரித்ததாகச் சொல்வாயாக.''

இவ்விடத்தில் இளைய பெருமாளுக்கு இவ்வளவு அடைமொழிகள் இடுவதற்கு காரணமென்னவென்று யோசித்தால், பிராட்டி தான் அவரிடத்தில் செய்த கொடிய அபராதத்திற்கு மன்னிப்பு வேண்ட முயன்றனளென்பது நன்கு விளங்கும். "ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம்'' (இராமனை தசரதனாகவும் ஜாநகியை நானாகவும் நினைத்துக்கொள்) என்கிற ஸுமித்ரா தேவியின் ஆணையின் படியும், "பிதா ச மம ராகவ:'' (எனக்கு தமையன், ஸ்வாமி, மற்றும் உறவினர், தந்தை, எல்லாம் இராகவனே) என்கிற தன் சொற்படியும் இலக்குமணன் உண்மையாகவே நடந்துகொண்டனன் என்று கொண்டாடுவதன் கருத்து, அவன் விஷயத்தில் தான் கொடிய சொற்களைப் பொழிந்தது தவறென்று காட்டி அவரிடத்தில் மன்னிப்பு வேண்டுவதேயன்றோ?

இது திருவடிமூலம் பிராட்டி மன்னிப்பு வேண்டியபடி. இனி நேரில் நடந்த அபராத க்ஷாமணத்தின் படியையும் காட்டுவோம். இராவணனை முடித்து விபீடணனுக்கு முடி சூட்டிய பிறகு, பெருமாள் அவன் மூலமாக பிராட்டியை வரவழைத்து, தான் அவளை மனைவியாக ஏற்றுக்கொள்ள முடியாதென்று பலகோடி வாநர வீரர்களின் மத்தியில் கூறிவிட, அதைக்கேட்ட பிராட்டி தன் தூய்மையைப் பலபடிகளால் எடுத்துரைத்தும் பெருமாள் திருவுள்ளமிரங்காமையை யுணர்ந்து, தான் திருவடிமூலம் மன்னிப்பு வேண்டிய செய்தி அவர் திருச்செவிகளுக்கு எட்டவில்லைபோலும், அல்லது எட்டியும் அவர் அதை ஏற்றுக்கொள்ளவில்லைபோலும் என்றெண்ணி, அதற்காக தான் பெரியதோர் ப்ராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமெனத் துணிந்து, இலக்குமணனை தீமூட்டித்தரச்சொல்லி தீக்குளித்தனளென்பது எல்லோருமறிந்த கதை.

பிராட்டிக்கு தீ வேண்டியிருந்தால் இலங்கையை தீக்கிரையாக்கின அநுமனையோ, அல்லது லங்காதிபதியான விபீடணனையோ வேண்டியிருக்கலாம். இளைய பெருமாளை வேண்டியதின் கருத்து, தான் அவர்பால் செய்த அபராதத்திற்கு அவர் கையால் தண்டனை பெறவேணுமென்கிற துணிவேயாகும். இளைய பெருமாள் பிராட்டியை தண்டிக்கவேணுமென்றெண்ணி அவளுக்குத் தீ மூட்டித் தந்தார்—

என்பது இதன் கருத்தன்று. அவர் பிராட்டியின் ஆணையையும் செய்கையால் காட்டப்பட்ட பெருமாள் கருத்தையும் பின்சென்று, தம் இஷ்டத்திற்கு மாருகவே தீ மூட்டினரேயன்றி தண்டிக்கும் நினைவு அவருக்கு கனவிலும் கிடையாது பெருமாள் நினைவு எப்படி யென்பது ஸரிவர விளங்கவில்லை. பிராட்டியைக் கண்டதும் அவருக்கு "ஹர்ஷோ தைந்யஞ்ச ரோஷச்ச ராகவம் த்ரயமாவிசத்" (யு, 117–17) ஸந்தோஷமும் துக்கமும்கோபமுமுண்டாயிற்றென்று வால்மீகி சொல்கிருர். ஆனல் கோபத்திற்குக் காரணமின்னதென்று தெரியவில்லை. தீக்குளிக்கவேணுமென்று பெருமாள் தம் வாயால் சொல்லவுமில்லை. பிராட்டி பேரில் யாதொரு குற்றத்தையும் அவர் சாட்டவுமில்லை. "தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே" (யு 118-17) "கண்ணேய் உடையானுக்கு விளக்குபோல எனக்கு உன் பார்வை பொறுக்கமுடியவில்லை" என்று பிராட்டியை வெறுப்பதற்குக் காரணம் தன்குற்றமே யென்றும் அவர் சொல்லியிருக்கிருர். ஆகிலும் அவர் அவளை பரீக்ஷிக்க விரும்பினரென்று கொள்ளவேண்டியிருக்கிறது; ஆனல் அப்பரீக்ஷை தனக்காகவன்று, பிறர்காக என்பதும் நன்கு புலப்படுகிறது. "ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்" என்று பிராட்டி (ப்ரணயாதேவ ஸங்க்ருத்தா) அன்பினல் கடிந்ததை பெருமாள்வெறுத்தாரென்றும் சொல்ல முடியாது. அன்பர்களின் ஊடுதல் மடலெடுக்கை முதலிய செய்கைகளால் பெருமாள் திருவுள்ள முகக்குமென்றே பெரியோர் சொல்லுகிருர்கள். இளையபெருமாள் விஷயத்தில் பிராட்டி அபசாரப்பட்டதற்கும் பெருமாள் அவளை வெறுத்ததாக வால்மீகி எங்கும் சொல்லவில்லை. இளையவரும் அக்கொடிய சொற்களைக் கேட்ட க்ஷணத்தில் சிறிது சினங் கொண்டனரேயன்றி பிறகு அதைப் பற்றி நினைக்கவே இல்லை. அச்சமயத்தில் சினங்கொண்டதற்குக் காரணம் தான் அவளை விட்டுப் பிரிந்து சென்று ஆபத்திற்கு இடமளிக்க நேர்ந்ததே என்கிற சிந்தையே யன்றி வேறில்லை, பொன்மானைப் பார்த்தபோதே, அது மாரீசன் மாயை யென்றும், அவன் ஏதோ தீங்கு செய்யவே மாயவேடத்தைப்பூண்டு வந்திருக்கின்றனனென்றும் அவர் நன்கு அறிந்தவராகையால், தான் பிராட்டியைத் தனியே விட்டுச் செல்ல விருப்பவில்லை. ஆக பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியை தண்டிக்க வேணுமென்று கருதினவரன்றென்பது விளங்கிற்று.

"ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்" என்கிற சொல்லைக்கேட்டு திருவுள்ளம் சன்றின பெருமாள் அவ்வபவாதத்தைப் போக்கிக்கொள்ளவேணுமென்று துணிந்து, கரன் தூஷணன் முதலிய பதிநாலாயிரவர் அரக்கர் படையெடுத்து வந்த பொழுது பிராட்டியையும், அவளுக்குத் திருமேனிக் காவலாக இளையோனையும் வெகுதூரம் அனுப்பிவிட்டு "கதம் யுத்தம் பவிஷ்யதி" (பதிநாலாயிரம் கொடிய அரக்கருடன் கள்ளங்கபடமறியாத பெருமாள் ஒருவராயிருந்து எப்படி போர் புரிவார்?) என்று அன்பர்கள் வயிறு பிடிக்கும்படி, தான் தனியாக போரிலிழிந்து அனைவரையும் அநாயாஸமாகமுடித்திட்டார். அப்போர் நடக்கும் ஸமயத்தில் பிராட்டி பெருமாளுக்கு என்ன தீங்கு விளையுமோ என்று தானும் மிகவும் வியாகுலப்பட்டு, ஸத்தையே இழந்துபோம்படியான நிலைமையிலிருந்தனளென்றும், பிறகு பெருமாள் வெற்றிமாலைசூடி மீண்டதைக்கண்டு ஸத்தை பெற்றனளென்றும் வால்மீகி முனிவர், "தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்...பபூவ" இத்யாதி சுலோகத்தினல் ஸூசிப்பித்திருக்கிருர். ஒருவிதத்தில் இதையும் பிராட்டிக்குக் கிடைத்ததொரு தண்டனையெனலாம்.

இப்படி யிருந்தபோதிலும் பிராட்டி மனத்தில்தான் அநியாயமாய் இரண்டு பேர்களிடத்திலும் கொடிய அபசாரம் செய்துவிட்டதாகவும், அது தான் தன் சிறைவாசத்திற்குக் காரணமாயிற்றென்றும், ப்ராயச்சித்தத்தினால் தான் அதைப் போக்கிக்கொள்ளவேண்டுமென்றும் திடமான எண்ணமிருந்தபடியால் அவள் திருவடி மூலம் மன்னிப்பு வேண்டவும், அது போதாதென்று பிறகு தீச்குளிக்கவும் துணிந்தாள். இதனால் தப்பு செய்பவர்கள் எப்படியும் அதற்கு ப்ராயச்சித்தம் செய்து கொண்டே யாகவேணுமென்கிற சாஸ்த்ரார்த்தம் சிக்ஷிக்கப்படுகிறது.

இனி பிராட்டி பரதாழ்வானிடமும் அபசாரப்பட்டனளாதலால் அதற்காக அவள் என்ன ப்ராயச்சித்தம் செய்துகொண்டனளென்று சிலர் கேட்கிறபடியால் இதற்கும் விடை கூறுகிறோம். பிராட்டி தனியாக பரதனை நிந்திக்கவில்லை. இலக்குமணனுடன் அவனையும் சேர்த்து குறை கூறினள். இலக்குமணன் விஷயமாகத் தான் சொன்னதெல்லாம் தவறு, அபசாரம் என்று அவள் சொன்னபிறகு பரதன் விஷயமும் அதற்குள் அடங்கிவிட்டது; ஆகையால் அவனிடம் தனியாக வேண்டிக்கொள்ள என்ன விருக்கிறது? மேலும் அதற்கேற்ற ஸந்தர்ப்பமும் கிடைக்கவில்லை. ஆகிலும அவன் விஷயமாகவும் அவள் இரண்டொரு சீறிய சொற்கள் பேசியிருப்பது கவனிக்கத்தக்கது. அதாவது, திருவடியிடம் அவள் பேசும்போது இடையில், "அயோத்தியில் நின்று அடிக்கடி குசல ஸமாசாரங்கள் தெரியவருகின்றனவா? பரதன் என்னை மீட்பதற்குப் பெரியதோர் படையைத் திரட்டி அனுப்பித் தருவானோ?" (கச்சித க்ஷௌஹிணீம் பீமாம் பரதோ ப்ராத்ருவத்ஸல:, த்வஜிநீம் மந்த்ரிபிர்குப்தாம் ப்ரேஷயிஷ்யதி மத்க்ருதே - ஸ 36-24) என்றும் வினவி யிருப்பது கவனிக்கத்தக்கது சித்ரகூடத்தில் பெருமாளிடம் விடைபெற்றுக் கொண்டு பரதன் ஊருக்குச் சென்ற பிறகு பெருமாள் அயோத்திக்கு எழுந்தருளும் வரையில் காட்டுக்கும் நாட்டுக்கும் யாதொரு தொடர்பும் கிடையாதென்றே புலப்படுகிறது தன்னைக் காணவேணுமென்று அயோத்தியிலிருந்து யாராவது அடிக்கடி வந்துவிடப்போகிறார்களே யென்றஞ்சி பெருமாள் அவ்விடத்தையே விட்டு தண்டகாரணியத்துக் கெழுந்தருளி விட்டாரென்று அயோத்யாகாண்டத்தின் முடிவில் சொல்லப்பட்டுள்ளது இப்படியிருக்க, பரதனின் குசலத்தை வினவுவதும், அவன் தனக்காக பெரும் படையை அனுப்புவனோ என்று கேட்பதும் அர்த்தமற்றதென்று தோன்றவில்லையா? பிராட்டி பரதனிடம் தான்வைத்திருந்த நல்ல மதிப்பை வெளியிடுவது தான் இதற்கு அர்த்தமென்றறியவேணும். இதனால் அவனிடம் தான் பட்ட அபசாரத்திற்கு ஒருவாறு ப்ராயச்சித்தமும் செய்தபடியாயிற்று

---

**அறிவிப்பு :—**

ஸ்ரீ. உ வே ஆதம்பாக்கம் கண்ணன்ஸ்வாமி அச்சிடுவித்த இரண்டுபாரங்கள் (16. பக்கங்கள்) இந்த ஸஞ்சிகையில் சேர்க்கப் பட்டிருக்கிறது "அண்ணஸ்வாமி உபந்யாஸ ஸஹஸ்ராம்ருதம்" என்கிற நூல் தொடர்ச்சியாக ஸ்ரீராமாநுஜனில் வெளிவருவதன்று, இப்படியொரு வெளியீடு நடந்துகொண்டிருக்கிறதென்று அனைவரும் தெரிந்து கொள்வதற்காகமட்டும் இந்த இரண்டு பாரம் இதில் சேர்க்கப்பட்டது. எனவே, Sample—ஆதர்சம் என்றபடி. ஆங்காங்கு புஸ்தக வியாபாரிகளின் புஸ்தக விக்ரய சாலைகளில் (டிஸம்பர் மாதத்திலிருந்து) இதன் பகுதிகள் விற்பனை செய்யப்படுமென்று தெரியவருகிறது. இங்ஙனம், **தி. அ. அக்காரக்கனி அனந்தாழ்வான்.**

# ஒரு ஸஹ்ருதயரின் சுவைமிக்க வார்த்தை

[இந்த ஸஞ்சிகையில் வரும் ந்ருஸிம்ஹப்ரியாஸமீக்ஷாவை பெங்களூரிலிருந்து வந்த ஒரு ரஸிகவித்வான் முழுதும் வாசித்துப்பார்த்துச் சொன்ன வார்த்தை.]

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ஸ்ரீஸூக்தியின் இன்சுவை

சரமச்லோகத்தில் ஏகஶப்தார்த்த விஶேஷங்கள் அருளிச்செய்கிற தேசிகன்-மிகவும் அற்பர்களான நாம் செய்கிற அல்பவியாபாரத்தை உபாயமென்று நினைக்கவும் சொல்லவும் கூடாதென்று பரக்க உபபாதித்து வருகையில்—"விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று" என்று ஸாதித்திருப்பதை நோக்குவாரில்லையே! வாதிப்ரதிவாதிகள் நேரில் வாதிக்கும்போது "ஏண்டா! உனக்கு விவேகமில்லையா? நீ உப்பு போட்டுண்டு உண்பதில்லையா?" என்றெல்லாம் பேசுவது வழக்கம். எப்போது? மிகவும் பொருத்தமற்ற பேச்சைப் பேசும்போது. தேசிகனுடைய விபவத்தில் ஸ்வாமியோடு நேரே ஒருவன் [உபாயம் உபாயம்] என்று மன்றாடினான். அவனுக்கு வேணது உரைத்தருளினார். எவ்வளவு உரைத்தும் அவன் மூளையில் ஏறவில்லை. ஸித்தோபாயமிருந்தாலும் ஸாத்யோபாயம் வேண்டாமோ? நாம் ஒன்றும் செய்யாமல் அவன் க்ருபைபண்ணிவிடுவனோ? என்று ஏதேதோ அவன் சொல்லிக்கொண்டிருந்தான். அப்போது ஸ்வாமிக்கு மிக்க சீற்றமுண்டாகி "நீ விவேகியாயிருந்தால் இப்படி பேசமாட்டாய்" என்று ஸாதித்துவிட்டு எழுந்தருளினார் போலும். அதுவே எழுத்தில் வடித்ததாயிற்று. உபாயவாதிகளிடத்தில் தேசிகனுக்கு எவ்வளவு சீற்றமிருந்ததென்பதை "விவேகியான" என்கிற ஒரு சொல்லினால் விவேகிகள் உணரலாம். தேசிகன் வேறு எங்கேயாவது (விவேகியான) என்று பிரயோகித்திருக்கிறாரா? என்று தேடிப்பார்க்கவேணும்.

ஒருவர் சொல்லவந்தார்—ஸாத்யோபாயத்தை ஸித்தோபாயத்தோடொக்க நினைத்துச் சொல்லுமவர்களை தேசிகன் க்ஷேபித்தாரேயொழிய வேறில்லை—என்று கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையில் 'நாஸ்ய ஸ்வவ்யாபாரே உபாயத்வபுத்திரபி ஸ்யாத்' என்றருளிச் செய்த தேசிகன் இந்த குத்ஸிதவாதங்களைச் சிறிதும் ஸஹிக்கமாட்டார். ஶரணாகதிதீபிகையில் *ஸ்வேனைவ க்ல்ப்தமபதேஶமவேக்ஷமாண:* என்றருளியது எல்லாவற்றுக்கும் மேல் குன்றிலிட்ட விளக்கு. பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீவசநபூஷணத்தில் 'த்ரிபாத்விபூதிசூர்ணிகையில்—"தனக்கேற இடம் பெற்றவளவிலே என்னாரைச் சொன்னாய் என்பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்...... என்று மடிமாங்காயிட்டு" என்றருளிச் செய்த திவ்ய ஸூக்திகளைக் கண்டபாடம் செய்திருந்தன்றோ 'ஸ்வேனைவ க்ல்ப்தமபதேஶம்' என்று பணித்தருளினார். கிம் பஹுநா? தேசிகனை ஆசார்யனாக வரிக்கத் தொடங்கினபோது இந்த ஸ்ரீஸூக்திகளில் கண் செலுத்தாமலே போயினர் என்பது ஸாரமான வார்த்தை.

இது ஸாதித்தவர்— ஞானப்பிரான் என்பவர்.

### திருக்குறுங்குடியில் திரு. ஜீயர் ஸ்வாமியின்
# அறுபத்தோராவது திருநக்ஷத்ர திருவிழா கொண்டாட்டம்
### (திரு திருநாராயண ஐயங்கார், திருஜீயர் மடம், திருக்குறுங்குடி)

ச்ரிய:பதியான ஸர்வேச்வரன் தனது ஸகல கல்யாணகுணங்களும் பொலிய நிற்கும் (அர்ச்சாவதார) திவ்யதேசங்களில் ஒன்றான திருக்குறுங்குடி என்கிற வைஷ்ணவவாமநக்ஷேத்ரத்தில் நிறைந்த நீலமேனியின் ருசிஜநக விபவலாவண்யம் பூர்ணமென்று ஆழ்வார் கருத்தையறிந்த நம் பூர்வாசாரியர்கள் கருதியுள்ளார்கள். இதற்கு நம்பி (பூர்ணன்) என்கிற இவ்வெம்பெருமானுடைய திருநாமமே ஸாக்ஷியாகும். எம்பெருமானார் இவ்விடம் எழுந்தருளியிருந்தபோது இந்நம்பியின் ஸ்ரீ பண்டார ஸ்ரீகார்ய நிர்வாஹத்திற்காகவும், தர்சன ப்ரவர்த்தனத்திற்காகவும் மடமொன்றை யமைத்தருளினர். இதில் ஜ்ஞாநுஷ்டாந ஸம்பந்நர்களான பல பெரியோர்கள் பீடாதிபதிகளாக விளங்கி பல வகைகளாலும் நம்பியின் கைங்கர்யங்களை நடத்தியும் விசேஷமாக தர்மப்ரசாரம் செய்தும் போந்தார்கள். 46-வது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ சடகோப ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற ஸ்ரீ ஸூக்திப்படி 96 திருநக்ஷத்திரங்கள் இவ்விபூதியில வீற்றிருந்து செய்துபோன திருப்பணிகள் உலகப்ரஸித்தம்.

வர்த்தமான பீடாதிபதியான 48-வது பட்டம் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி கலியன் ராமாநுஜஸ்வாமியின் 61-வது திருநக்ஷத்திர (ஷஷ்டி பூர்த்தி) மஹோத்ஸவம் புரட்டாசிமீ சதய நக்ஷத்திரத் திருநன்னாளன்று (16—10—75) வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. முதல்நாள் அவிட்ட நக்ஷத்திரத்தன்று 47-வதுபட்டம் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ பட்டர்பிரான் ராமானுஜ ஜீயர் ஸ்வாமியின் திருநக்ஷத்திர மஹோத்ஸவம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

ஷஷ்டிபூர்த்தி மஹோத்ஸவத்தன்று காலை ஸ்ரீஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ குழாங்களும் சிஷ்ய பரிஜந பரிசாரக வர்க்கங்களும புடைசூழ மடத்தினின்றும் புறப்பட்டு ஸ்ரீ நம்பி ஸன்னிதிக்கெழுந்தருளி பட்டு பீதாம்பரங்களையும் விசேஷமான தளிகைகளையும ஸமர்ப்பித்து மங்களாசாஸநம்செய்து, உடுத்துக் களைந்த பீதகவாடை, திருமாலை முதலான ஸகல மரியாதைகளையும் பெற்றுக்கொண்டு பிறகு அங்கிருந்து விடைகொண்டு வரிசையாக சிங்கப்பிரான் ஞானப்பிரான் தேவபிரான் திருக்குறுங்குடிநாச்சியார் (பெரிய பிராட்டியார்) திருவேங்கடமுடையான் வீற்றிருந்த நம்பி பள்ளிகொண்டநம்பி மாறனடி பணிந்துய்ந்த விராமாநுசன் மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற வவதரித்த மங்கையர் கோன் முதலானவர்களையும யதீந்த்ரப்ரவணரான மணவாள மாமுனிகளையும் மங்களாசாஸநம் செய்தருளி ஆங்காங்கு ப்ரஸாதங்களையும்பெற்று, ஸ்ரீவைஷ்ணவத்திரள் புடைசூழ மடத்துக்கு எழுந்தருளியாயிற்று பிறகு வேதபாராயண திவ்யப்ரபந்த ஸேவை தொடங்கப்பட்டு ஸ்ரீஸ்வாமிக்கு நவதிருப்பதிகள் மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய பல திவ்யதேசத்து எம்பெருமான்கள் அனுப்பிய திருப்பரியட்டம் முதலிய ப்ரஸாத மரியாதைகள் பஹு

மானிக்கப்பட்டு சாத்துமுறையும் நடந்தேறியது. அங்கு திரண்டிருந்த ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் மற்றும் மஹாஜநங்களுக்கும் தக்கபடி சந்தநம், தாம்பூலம், பலம், வஸ்த்ரம், ஸம்பாவனை, பூரிதக்ஷிணை முதலியன அதிவிமர்சையாக விநியோகிக்கப்பட்டு விசேஷமான ததீயாராதநமும் நடைபெற்றது. அச்சமயம் ஸ்ரீஸ்வாமியின் பெருமைகளை விளக்கிக்காட்டும் பத்ய மாலிகையொன்று ஸமர்ப்பிக்கப்பட்டது. மடத்தின் ஆதரவில் நடைபெற்று வரும் ஸ்ரீராமாநுஜ திவ்யப்ரபந்த பாடசாலை வித்யார்த்திகளை ஸ்ரீஸ்வாமி பரீக்ஷித்து இருபத்து மூவர்க்கு வஸ்த்ரபஹுமாநம் செய்தருளினர்.

அன்று இரவில் ஸ்ரீவைஷ்ணவக்குழாங்களும் சிஷ்யபரிஜனங்களும், கோவில் அனைத்துக் கொத்தும் புடை சூழ, ஸகல விருதுகளுடன் ஸ்ரீஸ்வாமி பட்டத்துத் தங்கப் பல்லக்கில் எழுந்தருளியிருந்து பட்டணப்ரவேசம் (திருவீதிவலம்) செய்தருளின வைபவம வாசாமகோசரம். ஸ்ரீமத் ஆதி பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் திருவடி நிலைகள் முன்பு எழுந்தருள, யதிராஜவிம்சதி தாடீ பஞ்சகம் முதலிய ஸ்தோத்ரங்களும் வெகு கம்பீரமாக ஸேவிக்கப்பட்டன.

மறுநாள் கடைவெள்ளிக்கிழமை யாதலால் நம்பியெம்பெருமான் காலை விசேஷமான அலங்கார திருமஞ்சனமும் போஜ்யாஸநமும், இரவு பரமவிலக்ஷண மான திருவீதிப்புறப்பாட்டையும் கண்டருளினன். கூடியிருந்த பக்த பாகவதோத்தமர்களெல்லாம் மிகவும் மனமுவந்து இந்த விலக்ஷணமான கோஷ்டிக்கு நித்ய ஸ்ரீர் நித்யமங்களமென்று பல்லாண்டுபாடிக் களித்தனர்.

---

## சோதிடர்க்கு விருதளித்தல்

தில்லைத் திருச்சித்திரகூடமென்னும் (சிதம்பர) க்ஷேத்ரத்தில் வாழும் ஸ்ரீமான் உ. வே. S. **ராமஸ்வாமி ஐயங்கார்** என்பவரை பலர் நன்கு அறிந்திருக்கிறார்கள். இவர் ஸ்ரீராமாநுஜமிஷன் (இந்தியா) என்கிற தர்ம ப்ரசாரக்குழுவின் ப்ரசாரகராக (Chief Organiser) பணியாற்றி வருகிறார். மற்றும் பல லௌகிக வைதிக நற்பணிகளிலும் பங்குகொண்டு வருகிறார். இவர் சோதிட நூல்களையும் கற்றறிந்து ஜாதகப்பலன் முதலியவற்றை விளக்குவதில் நல்ல திறமைபெற்றிருப்பதால், இதை யறிந்த நாம் மனமுவந்து இவர்க்கு,

**"தைவஜ்ஞ சக்ரவர்த்தி"**

என்கிற விருதை அன்புடன் சூட்டியிருக்கிறோம். —P. B. A. *2—11—75*

ஸ்ரீ:

# ஆதம்பாக்கம் கண்ணனடியேன் செய்யும் விண்ணப்பம்

உத்யோக முறையில் லௌகிகமாகக் காலங்கழித்துவருமடியேன் இரண்டொரு வருஷகாலமாகவே ஸ்ரீகாஞ்சீபுரம் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமிகளின் காலக்ஷேபங்களில் ஈடுபடவும், ஸ்வாமியின் மாதாந்தப் பத்திரிகையான ஸ்ரீராமாநுஜனையும், மற்றும் பலபல நூல்களையும் வாசிக்கவும் பாக்கியம் பெற்றேன். மாதந்தோறும் ஸ்ரீராமாநுஜன் பத்திரிகையை வாசிக்கும்போது, இதுகாறும் வெளிவந்த பழையபத்திரிகைகளை யெல்லாம் தருவித்து ஒன்று விடாமல் எல்லாவற்றையும் பூர்த்தியாக வாசிக்கவேணுமென்கிற அபிலாஷைமேலிட்டது. இப்பத்திரிகை இருபத்தெட்டு வருஷங்களுக்கு மேலாக நடைபெற்று வருவதாய்த் தெரிந்தது. 313வது லக்கமுள்ள பத்திரிகையிலிருந்துதான் அடியேன் இதில் அந்வயிக்கும் பாக்கியம் பெற்றேன். திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமான் உவே. M. A. வெங்கடகிருஷ்ணன்ஸ்வாமி ஸ்ரீராமாநுஜன் ஆரம்பம் முதல் வெளிவந்துள்ள வியாஸங்களுக்கெல்லாம் அகராதியட்டவணையெழுதிவெளியிட்டிருந்தார்; அதைக்கண்டபோது ஸ்ரீராமாநுஜன் ஆரம்பசஞ்சிகை தொடங்கி வரிசையாக எல்லாவற்றையும் ஒன்று விடாமல் ஸம்பாதித்து வாசிக்க வேணுமென்று குதூஹலம் அதிகரித்துவிட்டது. ஸ்ரீஸ்வாமியின் க்ரந்தமாலா ஆபீஸுக்கு எழுதினேன், நேரிலும் விடைகொண்டு என் அபேக்ஷையைத் தெரிவித்தேன். பழைய பத்ரிகைகள் தொடர்ச்சியாகக் கிடைக்க வழியில்லையென்று தெரிந்துகொண்டேன். கீழே ப்ரஸ்தாபித்த ஸ்ரீவெங்கடகிருஷ்ணன் ஸ்வாமி ஆதிமுதல் எல்லாச்சஞ்சிகைகளையும் பல ஸம்புடங்களாக பயிண்டு செய்வித்து வைத்துக் கொண்டிருக்கிறரென்றறிந்து அவரிடம் சென்று கெஞ்சிக்கேட்டு வாங்கிப்பார்த்து, பெரிய அமுதக்கடல் கண்டதாகவே யெண்ணி உள்ளமும் உடலும் பூரித்தேன்.

விஸ்தாரமாக எழுதுவதை நிறுத்தி இந்த விண்ணப்பத்தைச் சுருக்கமாக முடிக்கிறேன். ஸ்ரீராமாநுஜன் பத்திரிகையிலும், இப்பத்திரிகை ஆரம்பிப்பதற்கு முன்னே ஸ்ரீஸ்வாமிகள் நடத்திவந்த அம்ருதலஹரீபத்திரிகையிலும் உபந்யாஸரூபமாக வெளிவந்துள்ள கட்டுரைகளையெல்லாம் இவ்வுலகம் நீடூழிகாலம் அனுபவிக்க வேண்டுமாதலால் **அண்ணங்கராசார்யஸ்வாமி உபந்யாஸ ஸஹஸ்ராம்ருதம்** என்று பெயரிட்டு ஸ்ரீ ஸ்வாமியினுடையவைகளாக வெளிவந்துள்ள எல்லாவுபந்யாஸங்களையும் வைணவவுலகுக்கு வாரி வழங்கவேணுமென்று தீர்மானித்து இந்தத் தொகுப்பை அச்சிட்டு வெளியிட ஆரம்பம் செய்து விட்டேன். எம்பெருமான் கிருபையினாலும் பக்தபாகவதோத்தமர்களின் ஆசியினாலும் அடியேனுடைய இந்த பெரியமனோரதம் இடையூறின்றி நிறைவேறுமாக. இந்த ஆசையைப் பல பெரியார்களிடம் விண்ணப்பம்செய்தேன்; ஒவ்வொருவரும் ஏகமுகமாக அபிநந்தனம் செய்தபடியால் அதையே சுபசகுனமாகக் கொண்டு இன்று விஜயதசமியன்று ஆரம்பம் செய்துவிட்டேன். அடியேனுக்கு ஆசைமட்டும் பெரிதேயொழிய அறிவு மிகச்சிறிது; ஆயினும் ஸ்ரீஸ்வாமியினுடைய திருப்பேரனாரான உபயவே. அக்காரக்கனி அனந்தாழ்வான் ஸ்வாமியினுடையவும், திருவல்லிகேணி ஸ்ரீவேங்கடக்ருஷ்ணன் ஸ்வாமியினுடையவும் திருவருளைநம்பி இதில் ப்ரவர்த்தித்திருக்கிறேன்,

இந்த வெளியீட்டின் கார்யாலயம் முதலான விவரங்களைப்பற்றி அடுத்த மாதத்தில் தெரிவிக்கலாகும்.

*14—10—1975*
விஜயதசமி, திருவோணம்

இப்படிக்கு,
தாஸன், **கண்ணன்.**

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## அண்ணாஸ்வாமி யுபந்யாஸ ஸஹஸ்ராம்ருதத்தில்

முதலுபந்யாஸம்

# ★ அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத ★

ஸ்வாமி யெம்பெருமானார் அருளிச்செய்த திவ்யக்ரந்தங்கள் நவநிதிகளென்றும் நவரத்னங்களென்றும் ப்ரஸித்தமானவை. அவற்றுள் ஸ்ரீவைகுண்டகத்யத்தின் ஸமாப்திவாக்யம் அடியேனுடைய சிந்தனையில் நிச்சலுமுள்ளது. அதாவது அம்ருதஸாகராந்தர் நிமக்நஸர்வாவயவஸ் ஸுகமாஸீத என்பது. "அமுதக்கடலுள் அழுந்திய தனது ஸர்வாவயவங்களையு முடையனாக இருக்கக்கடவன்" என்பது இந்த வாக்கியத்தின்பொருள். பகவத் பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திகளை அடியேன் ஆழ்ந்து நோக்கும் போது பலவிடங்களில் "இன்ன ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியை யடியொற்றி இங்ஙனே யருளிச்செய்கிறார் ஸ்வாமி" என்று ஆசார்ய கடாக்ஷவிசேஷத்தினால் அடியேனுக்குத் தோன்றுவதுண்டு. மேலேகுறித்த அம்ருதஸாகராந்தர் நிமக்நேத்யாதி ஸ்ரீஸூக்தி எந்த ஆழ்வார் பாசுரத்திலிருந்து அவதரித்தது? என்று ஆராய்ந்தவளவில் நம்மாழ்வாரருளிச்செய்த நான்கு திவ்யப்ரபந்தங்களுள் இரண்டாவதான திருவாசிரியத்தில் இரண்டாவது பாசுரத்திலிருந்து அவதரித்ததென்று திண்ணமாக எண்ணலாயிற்று. அப்பாசுரத்தின் முற்பகுதியும், *அம்ருதஸாகராந்தர் நிமக்நேத்யாதி ஸ்வாமி ஸ்ரீஸூக்தியின் முற்பகுதியும் பாஷைவேற்றுமையேயன்றிக் கருத்துவேற்றுமை யற்றிருப்பதை நன்கு காணலாம். திருவாசிரியப்பாசுரம்* உலகுபடைத்துண்டவெந்தை, அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு, அவாவாருயிருருகியுக்க, நேரியகாதலன்பிலின் பீன் தேறல், அமுதவெள்ளத்தானாஞ்சிறப்பு...*இத்யாதி. இதையே மொழிபெயர்த்தருளியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீவைகுண்டகத்யாவஸானத்திலெனபதை அடுத்தபடியாக விவரிக்கிறேன். மேலேகாட்டிய திருவாசிரியப்பாசுரப்பகுதியின் பொருளை முந்துற முன்னம் விவரிக்கிறேன். [**உலகுபடைத்துண்ட**வித்யாதி-] எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளை நாம் சிரமேல் அணிந்துகொள்ள வேணுமென்று ஆவல் கொண்டு அந்த ஆவலினால் நெஞ்சு நீர்ப்பண்டமாக உருகி மேன்மேலும் பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் தலையெடுத்து அந்நிலைமையில் அமர்ந்திருச்கையாகிற அம்ருதஸாகரத்திலே ஆழ்ந்திருப்பவனாய்...என்றவாறு இப்பாசுரத்தில் *அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு......நேரியகாதல் அன்பிலின்பீன்தேறல் அமுதவெள்ளம்* என்றவிடத்து, "காதல் அன்பு இன்பு தேறல் அமுதவெள்ளம்" என்ற ஒருபொருட்பன்மொழிகளையே அடுக்கியிருக்குமழகைநோக்கி உள்குழைந்தருளின எம்பெருமானார், கத்யத்தில்

> கதா அஹம் பகவத்பாதாம்புஜத்வயம் சிரஸா தாரயிஷ்யாமி! கதா அஹம் பகவத்பாதாம்புஜத்வயபரிசர்யாஶயா......கதா அஹம் பகவத்பாதாம்புஜத்வய பரிசர்யா கரணயோக்ய:.........பகவத் பரிசர்யாயாம் ஆஶாம் வர்த்தயித்வா

இத்யாதிஸூக்திகளைத் தாம் வாய்வெருவும் முறையிலே அருளிச்செய்தாராயிற்று.

ஸ்வாமி ஸாதித்தருளின *அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவத்வம் ஸ்ரீவைகுண்டத்திலே; *முகில் வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்ப வெள்ளத்தே' (7-2-11.) என்று திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச்செய்த பேரின்பவெள்ளத் திருப்பும் திருநாட்டிலேயாம். *இச்சுவைதவிர...அச்சுவைபெறினும் வேண்டேன்* என்றிருக்கிற நாம்*வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம் புகழவே(3-3-11) *இங்கேகாண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே*(8-5-11) என்கிறபடியே இந்நிலத்திலேயே உலகமெல்லாங்காணப் பேரின்பவெள்ளத்தில் அமர்ந்திருக்கவேணுமாஞல் *முன்னவராம் நங்குரவர்மொழிகள் உள்ளப்பெற்றோம் முழுதுநமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்* என்ற மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தியின்படியிருத்தலொழிய வேறொன்றும் நானறியேன்.

அமரகோசத்தில் அமரர்களின் பெயர்களைச் சொல்லிவருமடைவில் *அமர்த்யா **அம்ருதாந்தஸ:*** என்று கூறப்பட்டது. (அம்ருதாந்தஸ:) என்பதற்கு அமுதத்தை உணவாகவுடையவர்கள்' என்று பொருள். அந்த அமுதம் எப்படியிருக்குமென்று யாருங் கண்டிலர். **அமர்த்யா:** என்னும் பெயர்க்கு எதிரிடையாக **மர்த்யா:** என்று பெயர் பெற்றிருக்கின்ற நாம் பருகும் அமுதமும், அல்லும் பகலும் குடைந்தாடும் அமுதக்கடலும் அந்த அமரர்களுக்கு ஒருகாலும் கிடைக்காது. இவ்வுலகத்திலுள்ளவர்களிலும் *தேநாவலோக்ய **க்ருதிந:** பரிபுஞ்ஜதே தம்* என்று பட்டர் அருளிச்செய்தபடியே சில பாக்யசாலிகளுக்கேயன்றோ கிடைக்குமது. குலசேகராழ்வார் தமது திருமொழியில் *எம்பெருமான்றன் சரிதை செவியால் கணைஞல் பருகுவோம் இன்னமுதம் மதியோமன்றே* என்கிருர். பெரியாழ்வார் தமது திருமொழியில் *அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே* என்கிருர் அவரே தமதுதிருமொழியைச் சாற்றும்போது (5-4-11)***அந்தணர்தமமுதம்*** என்று எம்பெருமானுக்கொரு திருநாமம் சாத்துகிருர். [ஆயரேற்றையமரர் கோவை அந்தணர்தம் அமுதத்தினை]என்கிற பாசுரம் அமுதமே வடிவெடுத்தன்றோவிருப்பது.

பிள்ளைப்பெருமாளையங்கார் திருவரங்கக் கலம்பகத்தின் முகப்பில் நம்மாழ்வார்க்குக் காப்புச் செய்யுள் இடுகின்றவர் *மறைப்பாற்கடலைத் திருநாவின்மந்தரத்தாற் கடைந்து, துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிழ்தம், கறைப்பாம்பணைப்பள்ளியா னன்பரீட்டங் களித்தருந்த, நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே* என்ருர். இப்பாசுரம் *கண்ணிநுண்சிறுத்தாம்பையும் வென்றதன்றோ விளங்குகின்றது, அந்தக் கலம்பகந்தன்னிலேயே அழகியமணவாளனுடைய திருப்புயங்களை வருணிப்பதற்கு ஒரு பிரமாண்டமான பாசுரம் பணிக்கின்ருர் ஐயங்கார்; *நகு கதிர் வழங்கு தகடுபடு செம்பொன்* என்று தொடங்கி *அழகியமணவாளர் கொற்றப் புயங்களே* என்று தலைக்கட்டுவது அந்தச் செய்யுள். அதில் *அருமறை துணிந்த பொருள்முடிவை யின்சொலமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர் சொல்பெற்றுயர்ந்தன* என்பது ஓர் அடைமொழி. இதில் *அமுதொழுகுகின்ற தமிழ்* என்றது திருவாய்மொழியை.

பதினறடி வேங்கைப் புலி யென்று பல பெரியார் வழங்குமிச் செய்யுள் முழுவதையும் ஒரு ஸமயம் அடியேன் திருவரங்கம் பெரிய கோயிலில் நாங்கு நாள் உபந்யஸிக்க ப்ராப்தமானபோது *அருமறைதுணிந்த பொருள்முடிவை **யின்**சொல்

